## குறிப்பு.

M. இவ்வடையாளமுள்ள சூத்திரங்கள் மெட்ரிகுலேஷன் பரீக்ஷைக்கு முக்கியமானவை.

F. எப்-எ.பரீக்ஷைக்கு முக்கியமானவை.

பி-எ. பரீக்ஷைக்கு எல்லாச்சூத்திரங்களும்.

## உ. பொதுப்பாயிரம்.

## GENERAL PREFACE.

பாயிரத்தின் பெயர்கள்:—The Different Synonyms of a Preface.

1. முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம், புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.

பாயிரத்தின் வகைகள்:—KINDS OF PREFACE.

2. பாயிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே. (உ)

பொதுப்பாயிரம்:—General Preface.

3. நூலே நுவல்வோ னுவலுந் திறனே, கொள்வோன் கோடற் கூற்றா மைந்தும், எல்லா நூற்கு மிவை பொதுப்பாயிரம். (௩)

---

## க. நூலின்வரலாறு.

## NATURE OF A CLASSICAL WORK.

---

நூல்,—A Classical Work.

4. நூலினியல்பே நுவலினோரிரு, பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய், நாற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி, ஐயிரு குற்ற

மகற்றியம் மாட்சியோ, டெண்ணைன் குத்தியி
ஞேத்துப்படலம், என்னு முறப்பினிற்சூத்திரங்
காண்டிகை, விருத்தியாகும் விகற்ப நடைபெ
றுமே. (௪)

நூலின் வகை:—Kinds of Classical Works.

5. முதல்வழி சார்பென நூன்மூன்ரு
கும். (௫)

முதனூல்.—Original Classics.

6. அவற்றுள்,

வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும். (௬)

வழிநூல்.—Supplemental Classics.

7. முன்னோர் நூலின் முடிபொருங்கொ
த்துப், பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி
அழியாமரபினது வழிநூலாகும்.

சார்புநூல்.—Derivative Classics.

8. இருவர் நூற்கு மொருசிறை தொடங்
கிரிபுவே றுடையது புடைநூலாகும்.

வழிநூலுக்கும் சார்புநூலுக்கும் சிறப்புவிதி.—Special Rule Regarding Supplemental and Derivative Classics.

வெண்பா.

9. முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவ மெனபதற்கும்—முன்னோரின், வேறு நூல் செய்துமெனு மேற்கோளி லென்பதற்குங், கூறுபழஞ் சூத்திரத்தின் கோள். (கூ)

நூற்பயன்.—Benefits derived from Classical Works.

10. அறம்பொரு ளின்பம்வீ டடைத லூற் பயனே. க0

எழுமதம்.—The Seven Objects of au Author.

11. எழுவகை மதமே யுடன்படன் மறுத்தல், பிறர்தம் மதமேற் கொண்டு களைவே, தாஅ ஞட்டித் தனாது நிறுப்பே, இருவர் மாறுகோ ளொருதலை துணிவே, பிறர்நூற் குற்றங் காட்டலேனைப், பிறிதொடு படாஅன் றன்மதங் கொளலே.

பதசூக்குற்றங்கள்.—The Ten Faults of Style.

குன்றக் கூறல் மிகைபடக் கூறல்,

கூறியது கூறன் மாறுகொளக் கூறல்,வழூஉச்
சொற் புணர்த்தன் மயங்க வைத்தல், வெற்றெ
னத் தொடுத்தன் மற்றொன்று விரித்தல், செ
ன்றுதேய்ந் திறுதனின்று பயனின்மை, என்றி
வை யீரைங் குற்ற நூற்கே. (கஉ)

பத்து அழகு.—The Ten Beauties of Style.

13. சுருங்கச் சொல்லல் விளங்க வைத்
தல், நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்
த்தல், ஓசை யுடைமை யாழமுடைத் தாதல்,
முறையின் வைப்பே யுலகமலையாமை, விழுமி
யது பயத்தல் விளங்குதா ரணத்த, தாகுத
னூலிற் கழகெனும் பத்தே. (கங)

முப்பதிரண்டு உத்தி.—The Thirty-two Rules of Criticism.

14. நுதலிப் புகுத லோத்துமுறை வைப்
பே, தொகுத்துச் சுட்டல் வகுத்துக்காட்டல்,
முடித்துக் காட்டன் முடிவிடங் கூறல், தா
னெடுத்து மொழிதல் பிறன்கோட் கூறல்,
சொற்பொருள் விரித்த றொடர்ச்சொற் புணர்
த்தல், இரட்டுற மொழிதலேதுவின் முடித்

ஒப்பின் முடித்தன் மாட்டெறிந் தொழுகல்,
இறந்தது விலக்க லெதிரது போற்றல், மூன்
மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல், விகற்
பத்தின் முடித்தன் முடிந்தது முடித்தல், உரை
த்து மென்ற லுரைத்தா மென்றல், ஒருதலை
துணிந்த லெடுத்துக் காட்டல், எடுத்த மொழியி
னெய்த வைத்தல், இன்ன தல்ல திதுவென
மொழிதல், எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல்,
பிறநூன் முடிந்தது தானுடன் படுதல், தன்
குறி வழக்க மிகவெடுத் துரைத்தல், சொல்
லின் முடிவி னப்பொருண் முடித்தல், ஒன்
றின் முடித்த றன்னின் முடித்தல், உய்த்துணர
வைப்பென வுத்தியெண் ணான்கே. (கச)

உத்தி.—Critical Acumen.

15. நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக்
காட்டி, ஏற்புழியறிந்திதற் கிவ்வகை யாமெ
னத், தகும்வகை செலுத்துத றந்திரவுத்தி.

ஒத்து அல்லது ஒழுங்கு.—Arrangement

16. நேரின மணியை நிரல்பட வைத்தாங்,
கோரினப் பொருளை யொருவழி வைப்ப,

தோத்தென மொழிப வுயர்மொழிப்புலவா.

படலம்,—Section.

17. ஒருநெறி யின்றி விரவிய பொருளால்,
பொதுமொழி தொடரி னதுபடலமாகும். (கஎ)

சூத்திரம்,—Verse.

18. சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொ
ருளைச், செவ்வனாடியிற் செறித்தினிது விளக்
கித், திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம். (கஅ)

சூத்திரநிலை.The Order and Connection of Verses.

19. ஆற்றொழுக் கரிமா நோக்கந் தவளைப்,
பாய்த்துப் பருந்தின்வீழ் வன்னசூத் திர
நிலை. (கக)

சூத்திரங்களுக்குக் காரணவகையால் வரும் பெயர்வேறுபாடு.
Different Kinds of Verses.

20. பிண்டந் தொகைவகை குறியே செய்
கை, கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்
திரம். (உ0)

உரையினது பொது லக்கணம் —The General
Characteristics of a Commentary.

21. பாடங் கருத்தே சொல்வகை சொல்

பொருள், தொகுத்துரை யுதாரணம் வினு
விடை விசேடம், விரிவதிகாரந் துணிவு பய
னோ, டாசிரிய வசனமென் றீரே ழுரை
யே. (௨௧)

காண்டிகையுரை.—Brief Commentary.

22. கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்
றினும், அவற்றொடு வினுவிடை யாக்கலானும்,
சூத்திரத் துட்பொரு டோற்றுவ காண்டி
கை. (௨௨)

விருத்தியுரை.—Elaborate Commentary.

23. சூத்திரத் துட்பொரு ளன்றியு மாண்
டைக், கின்றி யமையா யாவையும் விளங்கத்,
தன்னுரை யானும் பிறர்நூ லானும், ஐயமகல
வைங்காண்டிகை யுறுப்பொடு, மெய்யினையெ
ஞ்சா திசைப்பது விருத்தி. (௨௩)

நூலென்னும் பெயர்க்காரணம்.—Explanation
of the Term Nool [நூல்]

வெண்பா.

24. பஞ்சிதன் சொல்லாப பனுவ லிழை
யாகச், செஞ்சொற் புலவனே சேயிழையா—
எஞ்சாத், கையேவா யாகக் கதிரே மதியாக,
மையிலா நூன்முடியு மாறு. ௨௪

25. உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப், புரத்தின் வளமுருக்கிப் பொல்லா— மரத்தின், கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதே போன் மாந்தர், மனக்கோட்டந் தீர்க்கு நூன் மாண்பு. (உ௫)

---

## உ. ஆசிரியனது வரலாறு.

## THE CHARACTERISTICS OF A TEACHER.

---

நல்லாசிரியரிலக்கணம்.—Who can be a Teacher.

26. குலனரு டெய்வங் கொள்கை மேன்மை, கலைபயி றெளிவு கட்டுரை வன்மை, நில மலை நிறைகோன் மலர்நிகர் மாட்சியும், உலகிய லறிவோ டுயர்குண மினையவும், அமைபவ னூலுரை யாசிரி யனனே. (உ௬)

27. தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும், பருவமுயற்சி யளவிற் பயத்தலும், மருவிய நன்னில மாண்பாகும்மே. ([illegible])

28. அளக்க லாகா வளவம் பொருளும், துளக்க லாகா நிலையுந் தோற்றமும், வறப்பி னும் வளந்தரும் வண்மையு மலைக்கே. (உஅ)

29. ஐயந் திரப் பொருளை யுணர்த்தலும் மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே. (உகூ)

30. மங்கல மாகி யின்றி யமையா, தியா வரு மகிழ்ந்து மேற்கொள மெல்கிப், பொழு தின் முகமலர் வுடையது பூவே. (௩௦)

ஆசிரியராகாதாரிலக்கணம்.—Who cannot be a Teacher.

31 மொழிகுண மின்மையு மிழிகுண வியல்பும், அழுக்கா றவாவஞ்ச மச்சமாடலும், கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை, முடத் தெங் கொப்பன முரண்கொள் சிந்தையும், உடையோ ரிலரா சிரியராகுதலே. (௩க)

32. பெய்தமுறை யன்றிப் பிறழ வுடன்றரும், செய்தி கழற்பெய் குடத்தின்சீரே. (௩உ)

33. தானே தரக்கொளி னன்றித் தன் பால் கொளக்கொடா விடத்தது மட (௩௩)

34. அரிதிற் பெயக்கொண் டப்பொருடா
ன்பிறர்க், கெளிதீ வில்லது பருத்திக் குண்டி
கை. (௩௪)

35. பல்வகையுதவி வழிபடு பண்பின், அல்
லோர்க் களிக்கு மதுமுடத் தெங்கே. (௩௫)

---

## ௩. பா /சொல்லலினது வரலாறு.

## THE METHOD OF TEACHING.

36. ஈதலியல்பே யியம்புங் காலைக், காலமு
மிடனும் வாலிதி னோக்கிச், சிறந்துழி யிருந்து
தன் றெய்வம் வாழ்த்தி, உரைக்கப் படும்பொரு
ளுள்ளத் தமைத்து, விரையான் வெகுளான்
விரும்பி முகமலர்ந்து, கொள்வோன் கொள்
வகை யறிந்தவ னுளங்கொளக், கோட்டமில்
மனத்தினூல் கொடுத்த லென்ப. (௩௬)

---

## ௪. மாணாக்கனது வரலாறு.

## THE CHARACTERISTICS OF A STUDENT.

---

மாணாக்கரிலக்கணம்.—Who can be a Student.

37. தன்மக னாசான் மகனே

பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே,
உரைகோ ளாளற் குரைப்பது நூலே. (௩௭)

38. அன்ன மாவே மண்ணொடு கிளியே,
இல்லிக் குடமா டெருமை நெய்யரி, அன்னர்
தலையிடை கடைமா ணாக்கர். (௩௮)

மாணாக்கராகாதாரிலக்கணம்.—Who cannot be a Student.

39. களிமடி மானி காமி கள்வன், பிணிய
னேழை பிணக்கன் சினத்தன், துயில்வோன்
மந்தன் றொன்னூற் கஞ்சித், தடுமா றுளத்தன்
றறுகணன் பாவி, படிறனின் னோர்க்குப் பகரார்
நூலே. (௩௯)

---

## ௫. பாடங்கேட்டலின் வரலாறு.

## THE WAY TO LEARN.

40. கோடன் மரபே கூறுங் காலைப், பொ
ழுதொடு சென்று வழிபடன் முனியான், குண
த்தொடுபழகி யவன்குறிப் பிற்சார்ந், திருவென
விருந்து சொல்லெனச் சொல்லிப், பருகுவ
னன்ன வார்வத்த னாகிச், சித்திரப் பாவையி
னத்தக வடங்கிச், செவிவா யாக நெஞ்சுகள

னாகக், கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப், போவெனப்போத லென்மனார் புலவர். (ச0)

41. நூல்பயி லியல்பே நுவலின்வழக் கறி தல், பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல், ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல், அம் மாண்புடையோர் தம்மொடு பயிறல், வினாதல் வினாயவை விடுத்த லென்றிவை, கடனாக் கொ ளினே மடநனி யிகக்கும். (சக)

42. ஒரு குறி கேட்போ னிருகாற் கேட் பின், பெருக நூலிற் பிழைபா டிலனே. (சஉ)

43. முக்காற் கேட்பின் முறையறிந் துரை க்கும். (சங)

44. ஆசா னுரைத்த தமைவரக் கொளி னும், காற் கூறல்லது பற்றல னாகும். (சச)

45. அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகால், செவ்விதி னுரைப்ப வவ்விருகா லும், மையறுபுலமை மாண்புடைத் தாகும்.

46. அழலி னீங்கா னணுகா னஞ்சி, நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமோ, டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம், அறத்திற் றிரியாப் படர்ச்சிவழிபாடே. (சகூ)

பொதுப்பாயிரம் முற்றிற்று.

---

## சிறப்புப்பாயிரத்திலக்கணம்.

## THE CHARACTERISTICS OF A SPECIAL PREFACE.

---

சிறப்புப்பாயிரத்தின் பொதுவிலக்கணம்.—The General Characteristics of a Special Preface.

47. ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை, நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே, கேட்போர் பயனோ டாயெண் பொருளும், வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே. (சஎ)

48. காலங் களனே காரண மென்றிம், மூவகை யேற்றி மொழிநரு முளரே. (சஅ)

நூற்பெயருக்குச் சிறப்புவிதி.—A Special Rule to Name a Book.

49. முதனூல் கருத்த னளவு மிகுதி, பொருள்செய் வித்தோன் றன்மைமுத னிமித்தினும், இடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே. ()

வழியின் வகையாகிய நூலயாப்புகளுக்கு சிறப்புவிதி.—How a Book is to be Composed.

50. தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்ப், பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப. (௫0)

சிறப்புப்பாயிரஞ் செய்தற்குரியார்.—Who can write a Special Preface.

51. தன்னா சிரியன் றன்னொடு கற்றோன், றன்மா ணாக்கன் றகுமுரை காரனென், றின்னோர் பாயிர மியம்புதல் கடனே. (௫௧)

சிறப்புப்பாயிரம் பிறர் செய்தற்குக் காரணம் —Why a Special Preface should be written by others.

52. தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும், தான்றற் புகழ்த றகுதி யன்றே. (௫௨

தற்புகழ்ச்சி குற்றமாகா இடங்கள்.—When Self-praise is Excusable.

53. மன்னுடை மன்றத் தோலைத் தூக்கி னும், தன்னுடை யாற்ற லுணரா ரிடையினும், மன்னிய வவையிடை வெல்லுறு பொழுதி னும், தன்னை மறுதலை பழித்த காலையும், தன் னைப் புகழ்தலுந் தகும்புல வோர்க்கே. (ருங)

பாயிரம் நூலுக்கு இன்றியமையாதது.—Preface Indispensable to a Classical Work.

54. ஆயிர முகத்தா னகன்ற தாயினும், பாயிர மில்லது பனுவலன்றே. (ருச)

வெண்பா.

௫௫. மாடகுச சித்திரமு மாநகர்க்குக் கோ புரமும், ஆடமைத்தோ ளல்லார்க் கணியும் போல் - நாடிமுன், ஐதுரையா நின்ற வணிந்து ரையை யெந்நூற்கும், பெய்துரையா வைத் தார் பெரிது

சிறப்புப்பாயிரத் திலக்கணம் முற்றிற்று.

# க. எழுத்ததிகாரம்.

## எழுத்தினது அதிகரித்தலையுடைய படலம்.

## ORTHOGRAPHY.

---

### க. எழுத்தியல்.

### ON LETTERS.

---

கடவுள்வணக்கம்.—An Invocation.

56. பூமலி யசோகின் புனைநிழ லமர்ந்த,
நான்முகற் றொழுதுநன் கியம்புவ னெழுத்தே.

**F.** எழுத்திலக்கணத்தின் பகுதி.—Divisions of Orthography.

57. எண்பெயர் முறைபிறப் புருவமாத்தி
ரை, முதலீ றிடைநிலை போலி யென்றா, பதம்
புணர் பெனப்பன் னிருபாற் றதுவே. (உ)

---

### க. எழுத்தின் எண்.

### NUMBER OF LETTERS.

---

**M. F.** எழுத்தும் அதன் வகையும்.—Letters Defined and Classified.

58. மொழிமுதற் காரண மாமணுத் திர

ளொலி, எழுத்தது முதல்சார் பெனவிரு வகை
த்தே. (ரு)

**M. F.** முதலெழுத்தின் விரி.—Primary Letters Classified.

59. உயிரு முடம்புமா முப்பது முதலே.

**M. F.** சார்பெழுத்தின்வகை.—Secondary Letters Classified.

60. உயிர்மெய் யாய்த முயிரள பொற்றள,
பஃகிய இ உ ஐ ஔ மஃகான், தனிநிலை பத
துஞ் சார்பெழுத்தாகும். (௬)

சார்பெழுத்தின் விரி.—Secondary Letters,—Number.

61. உயிர்மெய் யிரட்டுநூற் றெட்டுயராய்
தம், எட்டுயி ரளபெழு மூன்றொற்றளபெடை,
ஆறே ழஃகு மிம்முப் பானேழ், உகரமாறு றை
கான் மூன்றே, ஔகா னொன்றே மஃகான்
மூன்றே, ஆய்த மிரண்டொடு சார்பெழுத் துறு
விரி, ஒன்றொழி முந்நூற் றெழுபானென்ப.()



## உ. எழுத்தின் பெயர்.

## NAMES OF LETTERS.

———:o:———

**M. F.** பொதுவிலக்கணம்.—General Characteristics.

62. இடுகுறி காரணப் பெயர் பொதுச் சிறப்பின. (எ)

**M. F.** உயிரும் மெய்யும் அவைகளின் தொகையும்.—Vowels and Consonants and their Number.

63. அம்முத லீரா றாவி கம்முதல், மெய்ம் மூவாறென விளம்பினர் புலவர். (அ)

**M. F.** குறில்.—Short vowels.

64. அவற்றுள், அ இ உ எ ஒக்குறிலைந்தே.

**M. F.** நெடில்.—Long vowels.

65. ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில். (கo)

**M. F.** சுட்டு.—Demonstrative Letters.

66. அ இ உம்முதற் றனிவரிற் சுட்டே.

**M. F.** வினா.—Interrogative Letters.

67. எ யா முதலும் ஆ ஓ வீற்றும், ஏ யிருவழியும் வினவா கும்மே. (கஉ)

**M. F.** வல்லினம்.—Hard Consonants. (*Surds*)

68. வல்லினங் க ச ட த ப ற வெனவா றே. (கா)

**M. F.** மெல்லினம்.—Soft Consonants. (*Nasals*)

69. மெல்லினம் ங ஞ ண ந ம ன வென வாறே. (கஉ)

**M. F.** இடையினம்.—Medial Consonants. (*Liquids*)

70. இடையினம் ய ர ல வ ழ ள வென வாறே. (கங)

**M. F.** இனவெழுத்து.—Kindred Letters.

71. ஐ ஔ இ உச் செறிய முதலெழுத், திவ்விரண் டோரின மாய்வரன் முறையே. (கசு)

இனமென்றதற்குக் காரணம்.—Grounds for Kindredness.

72. தான முயற்சி யளவு பொருள்வடி, வானவொன் றுதியோர் புடையொப் பினமே.

ங. எழுத்தின்முறை.

ARRANGEMENT OF LETTERS.

73. சிறப்பினு மினத்தினுஞ் செறிந்தீண் டம்முதல், நடத்தூ றுனே முறையாகும்மே.

## ௪. எழுத்தின் பிறப்பு.
## ORIGIN OF LETTERS.

பொதுவிதி.—General Rule.

74. நிறையுயிர் முயற்சியி னுள்வளி துரப்ப, எழுமணுத் திரளுரங் கண்ட முச்சி, மூக்குற் றிதழ்நாப் பல்லணத் தொழிலின், வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே. (௧௧)

முதலெழுத்துகளுக்குப் பிறப்பிடம்.—The Different Places from which Primary Letters originate.

75. அவ்வழி, ஆவி யிடைமை யிடமிடறாகும், மேவு மென்மைமூக் குரம் பெறும் வன்மை. (௨௦)

முதலெழுத்துகளுக்கு முயற்சிவகையாற் பிறப்பு.—Efforts to pronounce Primary Letters.

76. அவற்றுள், முயற்சியுள் அ ஆ அங்காப் புடைய. (௨௩)

77. இ ஈ எ ஏ ஐ யங் காப்போ, டண்பல் முதனா விளிம்புற வருமே. (௨௪)

78. உ ஊ ஒ ஓ ஔ விதழ் குவிவே. (௨௫)

79. கஙவுஞ் சஞவும் டணவு முதலிடை, நுனிநா வண்ண முறமுறை வருமே. (உ௪)

80. அண்பல் லடிநா முடியுறத தநவரும்.

81. மீகீ ழிதழுறப் பம்மப் பிறக்கும்.(உ௫)

82. அடிநா வடியண முறயத் தோன்றும்.

83. அண்ண நுனிநா வருட ரழவரும். ()

84. அண்பன் முதலு மண்ணமு முறை யின், நாவிளிம்பு வீங்கி யொறறவும் வருடவும், லகார ளகாரமா யிரண்டுமெ பிறக்கும். (உ௬)

85. மேற்பல் லிதழுற மேவிடும் வவவே.

86. அண்ண நுனிநா நனியுறிற் றனவரும்.

சார்பெழுத்துக்கு இடமுயற்சி.—The Places from which Secondary Letters originate and the Effort to produce them.

87. ஆய்தக் கிடந்தலை யங்கா முயற்சி, சார் பெழுத் தேனவுந் தம்முத லனைய. (௩உ)

எழுத்துகளின்பிறப்புக்குப் புறனடை.—Exception regarding the Origin of Letters.

88. எடுத்தல் படுத்த லவித லுழப்பிற், றிரி புந் தத்தமிற் சிறிதுள வாகும். (அஅ)

**F.** உயிர்மெய்.—Vowel Consonants.

89. புள்ளிவிட் டவ்வொடு முன்னுருவா கியும், ஏனை யுயிரோ டுருவு திரிந்தும், உயி ரளவாயதன் வடிவொழித் திருவயின், பெய ரொடு மொற்றுமுன் னாய்வரு முயிர்மெ.

**M. F.** முற்றுய்தம்.—The Aydam.

90. குறியதன் முன்ன ராய்தப் புள்ளி, உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசை த்தே. (கூ0)

**M. F.** உயிரளபெடை.—Vowel Prolongation.

91. இசைகெடின் மொழிமுத லிடை கடை நிலைநெடில், அளபெழு மவற்றவற்றின க்குறில் குறியே. (கூக)

**F.** ஒற்றளபெடை.—Consonant Prolongation.

92. ஙஞண நமன வயலள வாய்தம், அள பாங்குறிலிணை குறிற்கீழ்டைகடை, மிகலே யவற்றின் குறியாம் வேறே. (கூஉ)

டம், மெய்ம்மயக் குடனிலை ரழவொழித்தீரெ
ட், டாகுமிவ் விருபான் மயக்குமொழியிடை,
மேவு முயிர்மெய் மயக்கள வின்றே.

வேற்றுநிலை மெய்ம்மயக்கச் சிறப்புவிதி.—Combination of different Consonants,-Special Rule.

111. ஙம்முன் கவ்வாம் வம்முன்யவ்வே.

112. ஞநமுன் றம்மினம் யகரமோ டாகும்.

113. டறமுன் கசப மெய்யுடன் மயங்கும்.

114. ணனமுன் னினங்கச ஞபமய வவ் வரும். (ருக)

115. மம்முன் பயவ மயங்கு மென்ப. (சுo)

116. யரழ முன்னர் மொழிமுதன் மெய் வரும். (சுக)

117. லளமுன் கசப வயவொன் றும்மே.

உடனிலை மெய்ம்மயக்கச் சிறப்புவிதி.—Combination of same Consonants,-Special Rule.

118. ரழவல் லனதம்முற் றுமுட னிலை யும். (சுரு)

தனிமெய்யுடன் தனிமெய்யாய மயங்கும் எழுத்துக்களும் மொழிக்கு உறுப்பாக மயங்காத எழுத்துக்களும் —What double Letters may follow ய், ர், ழ்,

119. யரழவொற் றின்முன் க ச த ப ங ஞ ந ம, வீரொற் றும்ர ழத் தனிக்குறி லணையா. ()

செய்யுளில் ஈரொற்றாய் நிற்கும் எழுத்துக்கள்.—Double Consonants that occur in Poetry.

120. லளமெய் திரிந்த னணமுன் மகாரம், நைந்தீ ரொற்றாஞ் செய்யு ளுள்ளே. (கரு)

முதனிலை இறுதிநிலை இடைநிலைகளுக்குப் புறனடை. Exception to Rules regarding Initial, Final and Middle Letters.

121. தம்பெயர் மொழியின் முதலுமயக்க மும், இம்முறை மாறியு மியலு மென்ப. (கசு)

---

## ௧0. எழுத்தின் போலி.

Interchange of Letters.

---

**M. F.** மொழி யிறுதிப்போலி.—Interchange at the end of Words.

122. மகர விறுதி யஃறிணைப் பெயரின்

**M. F.** * குற்றியலுகரம்.—Shortened உ.

93. நெடிலோ டாய்த முயிர்வலி மெலியி
டை, தொடர்மொழி யிறுதி வன்மை யூருகரம்
அஃகும் பிறமேற் றொடரவும் பெறுமே. (௯அ)

**M. F.** குற்றியலிகரம்.—Shortened இ.

94. யகரம் வரக்குற ளுத்திரி யிகரமும்,
அசைச்சொன் மியாவி னிகரமுங்குறிய. (௯௯)

**M. F.** ஐகார ஔகாரக்குறுக்கங்கள். Shorteed ஐ & ஔ

95. தற்சுட் டளபொழி யைம்மூவழியும்,
நையு மௌவு முதலற் றாகும். (௭0)

**M. F.** மகரக்குறுக்கம் Shortened ம்.

96. ணனமுன்னும் வஃகான் மிசையுமக்
குறுகும். (௭௧)

**M. F.** ஆய்தக்குறுக்கம்.— Shortened Aydam.

97. லளவீற் றியைபினு மாய்த மஃகும்.

---

குற்றியலுகரத்திலக்கணம தெரிந்தாலண்றிக் குறறிய லிகர த்திலக்கணம தெரியாதாகையால் குற்றியலுகரத்தின்பின் குற்றியலிகரச் சூத்திரம் வைக்கப்பட்டது.

## ௫. எழுத்தின் உருவம்.

### FORM OF LETTERS.

98. தொல்லை வடிவின வெல்லா வெழு
த்துமாண், டெய்து மேகார வோகாரமெய்
புள்ளி. (௪௩)

---

## M. F. ௬. எழுத்தின் மாத்திரை.

### QUANTITY OF LETTERS.

99. மூன்றுயி ரளபிரண் டாநெடி லொன்
றே, குறிலோ டையௌக் குறுக்கமொற்றள,
பரையொற்றி உக்குறுக்க மாய்தம், கால்குறண்
மஃகா னாய்த மாத்திரை. (௪௪)

**M. F.** மாத்திரை.—Quantity defined.

100. இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்
திரை. (௪௫)

M. F. மாத்திரைக்குப் புறனடை.—Exception regarding Quantity.

101. ஆவியுமொற்று மளபிறந் திசைத்த
லும், மேவுமிசைவிளி பண்டமாற்றாதியின்.

## எ. எழுத்தின் முதனிலை.
## INITIAL LETTERS.

**M. F.** பொதுவிதி.—General Rule.

102. பன்னீ ருயிருங் கசதந பமவய, ஞங
வீரைந் துயிர் மெய்யு மொழிமுதல். (சஎ)

**F.** சிறப்புவிதி (வகரமுதனிலை).—Special Rule
(Initial வ.)

103. உ ஊ ஒ ஓ வலவொடு வம்முதல்.

**F.** சிறப்புவிதி (யகரமுதனிலை).—Special Rule
(Initial ய.)

104. அ ஆ உ ஊ ஓ ஔ யம் முதல்.(சஅ)

**F.** சிறப்புவிதி (ஞகரமுதனிலை) Special Rule
(Initial ஞ.)

105. அ ஆ எ ஒவ்வோடாகு ஞம்முதல்.

**F.** சிறப்புவிதி (ஙகரமுதனிலை)—Special Rule
(Initial ங.)

106. சுட்டியா வெகர வினவழி யவ்வை,
ஒட்டி ஙவ்வு முதலாகும்மே. (ருக)

## ௮. எழுத்தின் இறுதிநிலை.
## FINAL LETTERS.

**M. F.** பொது விதி.—General Rule.

107. ஆவி ஞண நமன யரல வழள மெய்,
சாயு முகர நாலாறு மீறே. (௫௨)

சிறப்பு விதி.—Special Rule.

108. குற்றுயி ரளபி னீறா மெகரம், மெய்
யோ டேலாதொந் நவ்வோ டாமௌக், ககர
வகரமோ டாகு மென்ப. (௫௩)

உயிர்மெய்யெழுத்துக்கு முதலும் ஈறும்.—Initial and
Final Letters in Vowel-Consonants.

109. நின்ற நெறியே யுயிர்மெய்ம் முதலீ
றே. (௫௪)

## ௯. எழுத்தின் இடைநிலை.
## MIDDLE LETTERS.

இடைநிலைமயக்கம் (பொதுவிதி).—Combination of
Letters in words,-General Rule.

110. கசதப வொழித்தவீ ரேழன் கூட

போ வெளவுரி ஞுண்பொருந் திருந்தின், தேய்
பார் செல்வவ் வாழ்கே ளஃகென், றெய்திய
விருபான் மூன்றா மீற்றவும், செய்யெனே வல்
வினைப்பகாப்பதமே (௧௦)

**M. F.** பிறவினை யேவற்பகுதிகட்குச் சிறப்புவிதி.—Causal Imperative Verbal Roots (Special Rule.)

138. செய்யென் வினைவழி விப்பிதனிவரி
ன், செய்வியென்னேவ லிணையினீ ரேவல். (௧௧)

**F.** வினைப்பகுதிக்குப் புறனடை.— Exception regarding Verbal Roots.

139. விளம்பிய பகுதிவே றாதலும் விதி
யே. (௧௨.)

---

## விகுதி.

## F. TERMINATIONS.

140. அன் ஆன் அள் ஆள் அர் ஆர்
பம் மார், அ ஆ குடுதுறு என் ஏன் அல்
அன், அம் ஆம் எம் ஏம் ஒமொடும்மூர், கட
தற ஐ ஆய் இம்மின் இர் ஈர், ஈயர் கயவு

மென்பவும் பிறவும், வினையின் விகுதிபெயரி
னுஞ் சிலவே. (௧௩)

---

## இடைநிலை.

## MEDIAL PARTICLES.

---

பெயரிடைநிலை.—Medial Particles of Nouns.

141. இலக்கியங் கண்டதற் கிலக்கண
மியம்பலின், பகுதி விகுதி பகுத்திடை நின்ற
தை, வினைப்பெய ரல்பெயர்க் கிடைநிலையெ
னலே. (௧௪)

**M. F.** இறந்தகாலவினை இடைநிலை.—Medial Particles
of Verbs of the Past Tense.

142. தடறவொற் றின்னே யைம்பான்
மூவிடத், திறந்த காலந்தருந்தொழி லிடை
நிலை. (௧௫)

**M. F.** நிகழ்காலவினை இடைநிலை.—Medial Particles of
Verbs of the Present Tense.

143. ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்,
ஐம்பா னிகழ்பொழு தறைவினை யிடை
நிலை. (௧௬)

**M. F.** எதிர்கால வினை இடைநிலை.— Medial Particles of Verbs of the Future Tense.

144. பவ்வ மூவிடத் தைம்பா லெதிர்
பொழு திசைவினை யிடைநிலை யாம்வவ
சிலவில. (௧௭)

**M. F.** காலங்காட்டும் விகுதி.—Verbal Terminations showing Tense

145. றவ்வொ டுகர வும்மைநிகழ் பல்லவும்,
தவ்வொ டிறப்பு மெதிர்வும் டவ்வொடு,
கழிவுங் கவ்வோ டெதிர்வு மின்னேவல், வியங்
கோ ளிம்மா ரெதிர்வும் பாந்தம், செலவொடு
வரவுஞ் செய்யுநிகழ் பெதிர்வும், எதிர்மறை
மும்மையு மேற்கு மீங்கே. (௧௮)

---

## வடமொழி ஆக்கம்.

[ஆரியமொழி தமிழில் வடமொழியாதல்.

## EXPRESSION OF SANSCRIT WORDS IN TAMIL.

---

பொதுவிதி.—General Rule.

146. இடையி னான்கு மீற்றிலிரண்டும்
அல்லா வச்சை வருக்க முதலீறு, யவ்வாதி

நான்மை னவ்வாகு மையையம், பொதுவெழுத்
தொழிந்தநா லேழுந் திரியும். (கக)

சிறப்புவிதி.—Special Rule.

147. அவற்றுள், ஏழாமுயி ரிய்யு மிருவு
மை வருக்கத், திடையின் மூன்று மவ்வம்
முதலும், எட்டே யவ்வு முப்பது சயவும்,
மேலொன்று சடவு மிரண்டு சதவும், மூன்
றே யகவு மைந்திரு கவ்வும், ஆவீறையுமீயீ
றிகரமும். (உ0)

148. ரவ்விற் கம்முத லாமுக் குறிலும்,
லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற், கிய்யு
மொழிமுத லாகிமுன் வருமே. (உக)

149. இணைந்தியல் காலை யரலக் கிகரமும்,
மவ்வக் குகரமு நகரக் ககரமும், மிசைவரும் ரவ்
வழி யுவ்வு மாம்பிற. (உஉ)

தமிழெழுத்திற் சிறப்பெழுத்தும் பொதுவெழுத்தும்.—Letters Peculiar to Tamil and those Common to Sanscrit and Tamil.

150. றனழ எஒவ்வு முயிர்மெய்யு முயிரளா,
பல்லாச் சார்புந் தமிழ்பிறபொதுவே. (உங)

**பதவியல் முற்றுப்பெற்றது.**

# ௩. உயிரீற்றுப்புணரியல்.

# COMBINATION OF VOWEL FINALS.

## புணர்ச்சி.

## COMBINATION.

புணர்ச்சியாவது.—Combination Defined.

151. மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்க
ளும், தன்னொடும் பிறிதொடு மல்வழிவேற்று
மைப், பொருளிற் பொருந்துழி நிலைவருமொ
ழிகள், இயல்பொடு விகாரத் தியைவது
புணர்ப்பே. (௧)

**M. F.** அல்வழி வேற்றுமைப் புணர்ச்சி.—Non-Casal and Casal Combinations.

152. வேற்றுமை யைம்முத லாறா மல்
வழி, தொழில்பண் புவமை யும்மை யன்
மொழி, எழுவாய் விளியீ ரெச்சமுற் றிடை
யுரி, தழுவு தொடரடுக் கெனவீ ரேழே. (௨)

**M. F.** இயல்புப் புணர்ச்சி.—Natural Combination.

153. விகார மனைத்து மேவல தியல்பே. ()

**M. F.** விகாரப் புணர்ச்சி.—Mutational Combination.

154. தோன்ற றிரிதல் கெடுதல் விகாரம்,
மூன்று மொழிமூ விடத்துமாகும். (சு)

**M. F.** செய்யுள் விகாரம்.—Poetical Changes.

155. வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்
கல், விரித்த றொகுத்தலும் வருஞ்செய்யுள்
வேண்டுழி. (ரு)

**F.** 156. ஒருமொழி மூவழிக் குறைதலு
மனைத்தே. (சா)

**M. F.** 157. ஒரு புணர்க் கிரண்டு மூன்று
முறப்பெறும். (எ)

## பொதுப்புணர்ச்சி.

## GENERAL COMBINATION.

**M. F.** எல்லா விறுதியின் முன்னும் மெல்லினமும் இடையினமும் புணர்தல்.—Combination of 24 Finals with Soft and Middle Consonants.

158. எண்மூவெழுத்தீற் றெவ்வகைமொ
ழிக்கும், முன்வரு ஞநமய வகவியல்பும்,

குறில்வழி யத்தனி யைகநொது முன்மெலி,
மிகலுமாம் ணளனல வழிநத்திரியும். (அ)

**M. F.** பொதுப்பெயர் உயர்திணைப்பெயர் ஈறு.—Consonant and Vowel Finals of Epicene and Personal Nouns.

159. பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க
ளீற்றுமெய், வலிவரி னியல்பா மாவி யரமுன்,
வன்மை மிகாசில விகாரமா முயர்திணை. (க)

**M. F.** வினாப்பெயர் விளிப்பெயர்முன் வல்லினம்.—Hard Consonants after Interrogatives and Vocatives.

160. ஈற்றியா வினாவிளிப் பெயர் முன்
வலி யியல்[illegible] th the [illegible] after Nom[illegible] (கம)

**M. F.** முன்னிலைவினை ஏவல் வினைமுன் வல்லினம்.—Hard Consonants after Second Person and Imperative Verbs ending in Vowels and ய், ர், & ழ்.

161. ஆவி யரழ விறுதி முன்னிலை வினை.
ஏவன் முன் வல்லின மியல்பொடு விகற்பே.( )

## உயிரீற்றுச் சிறப்புப் புணர்ச்சி.

## SPECIAL COMBINATION OF VOWEL FINALS.

---

**M. F.** உயிர்முன் உயிர்புணர்தல், (உடம்படுமெய்).—Combination of Vowel Finals with Vowel Initials, (*Insertion of* ய், *or* வ்,)

162. இ ஈ ஐவழி யவ்வு மேனை, உயிர்வழி வவ்வு மேமுனிவ் விருமையும், உயிர்வரி னுடம்படு மெய்யென் றாகும். (கஉ)

**M. F** எகரவினா முன்னும் சுட்டின் முன்னும் நாற்கணமும் புணர்தல்.—Combination of Interrogative எ and Demonstratives wi[illegible] four kinds of Initial Letters.

163. எகர வினாமுச் சுட்டின் முன்னர், உயிரும் யகரமு மெய்தின் வவ்வும், பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு, நீளின் யகரமுந் தோன்றுதனெறியே. (கங)

**M. F** குற்றியலுகரத்திற்கும் சில முற்றியலுகரத்திற்கும் முன் உயிரும் யகரமும் புணர்தல்.—Combination of Shortened உ and Natural உ. with Vowels and ய்.

164. உயிர்வரி னுக்குறண் மெய்விட் டோடும், யவ்வரி னிய்யா முற்றுமற் றொ ரோவழி. (கச)

---

## உயிரீற்றின்முன் வல்லினம் புணர்தல்.

## COMBINATION OF HARD CONSONANTS WITH VOWEL FINALS.

---

**M. F.** பொதுவிதி.—General Rule.

165. இயல்பினும் விதியினு நின்ற வுயிர் முன், கசதப மிகும்வித வாதன மன்னே. (கரு)

**M. F.** உயிரீற்றுமரப்பெயர் முன் வல்லினம்.—Hard Consonants after Names of Trees ending in Vowels

166. மரப்பெயர் முன்ன ரினமெல்லெழு த்து, வரப்பெறு னவுமுள வேற்றுமை வழியே.

---

## அகரவீற்றுப்புணர்ச்சி.—COMBINATION OF FINAL அ.

---

**M. F.** அகரவீற்றின்முன் வல்லினம்.—Hard Consonants after Final அ.

167. செய்யிய வென்னும் வினையெச்சம்
பல்வகைப், பெயரி னெச்சமுற் றறனுருபே,
அஃறிணைப் பன்மை யம்மமுன் னியல்பே. ()

**M. F** வாழிய என்னுஞ் சொல்லுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding வாழிய.

168. வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய்,
யாகலு முரித்தஃ தேகினு மியல்பே. (கஅ)

**F.** சாவ என்னுஞ் சொல்லுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding சாவ.

169. சாவவென் மொழியீற் றுயிர்மெய்
சாதலும் விதி. (கக)

**F.** பல சில என்னுஞ் சொற்களுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding பல and சில.

170. பலசில வெனுமிவை தம்முன்றாம்

வரின், இயல்பு மிகலு மகர மேக, லகரம் றகர மாகலும் பிறவரின், அகரம் விகற்ப மாகலு முளபிற. (உ0)

## ஆகாரவீற்றுப்புணர்ச்சி.—COMBINATION OF FINAL ஆ.

**F.** ஆ, மா, மியா என்னுஞ் சொற்களுக்கும் ஆகாரவீற்று வினைமுற்றுக்களுக்குஞ் சிறப்புவிதி.—Special Rule rogarding ஆ, மா, மியா, and Finite Verbs ending in ஆ.

171. அல்வழி யாமா மியாமுற்று முன்மிகா. (உக)

**F.** குறிலணைந்த அகாரவீற்றுச் சொற்களுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding Final அ after short Vowels or Vowel-consonants.

172. குறியதன் கீழாக்குறுகலு, மதனோ, டுகர மேற்றலு மியல்பு மாந் தூக்கின். (உஉ)

## இகரவீற்றுப்புணர்ச்சி.—COMBINATION OF FINAL இ.

**M. F.** அன்றி இன்றி என்னுஞ் சொற்களுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding அன்றி and இன்றி.

**173.** அன்றி யின்றியென் வினையெஞ்
சிகரம், தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே.

நாழி உரி என்னுஞ் சொற்களுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding நாழி & உரி.

**174.** உரிவரி னாழியி னீற்றுயிர் மெய்கெட,
மருவும் டகர முரியின் வழியே, யகரவுயிர்
மெய்யா மேற்பன வரினே. (உச)

புளி என்னுஞ் சொல்லுக்குச் சிறப்பவிதி.—Special Rule regarding புளி.

**175.** சுவைப்புளி முன்னின மென்மையுந்
தோன்றும். (உரு)

## இகர ஐகாரவீற்றுப்புணர்ச்சி.—COMBINATION OF FINAL இ AND ஐ.

**M. F.** இகர ஐகார வீறதின்முன் வல்லினம்:—Hard Consonants after Final இ and ஐ.

176. அவ்வழி இ ஐ முன்ன ராயின், இயல்பு மிகலும் விகற்பமு மாகும். (உசு)

## சகாரவீற்றுப்புணர்ச்சி.—COMBINATION OF FINAL சு.

ஆபபீ முன் நாற்கணமும.—Four kinds of Initial Letters after ஆப்பீ.

177. ஆமுன் பகரவீ யனைத்தும் வரக்குறும், மேலன வல்வழி யியல்பாகும்மே. (உஎ)

சில ஈகார வீறதின்முன் வல்லினம்.—Hard Consonants after பீ, நீ, and மீ.

178. பவ்வீ நீமீ முன்ன ரல்வழி, இயல்பாம் வலிமெலி மிகலுமா மீக்கே. (உஅ)

## உகாவீற்றுப்புணர்ச்சி.—COMBINATION OF FINAL உ.

---

**M. F.** சில முற்றியலுகர வீற்றின்முன் வல்லினம்.—Hard Consonants after Natural உ.

179. மூன்றா றுருபெண் வினைத்தொகை சுட்டீ, றாகு முகர முன்ன ரியல்பாம். (௨௯)

அது என்னும் மொழிக்குச் சிறப்புவிதி —Special Rule regarding அது in Poetry.

180. அதுமுன் வருமன் றன்றாந் தூக்கின். (௩௦)

**M. F.** குற்றியலுகர வீற்றின்முன் வல்லினம்.—Hard Consonants after shortened உ.

181. வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி. (௩௧)

182. இடைத்தொட ராய்தத் தொடரொற் றிடையின், மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை. (௩௨)

**M. F.** டு, று, ஏற்றுச் சில குற்றியலுகரங்கள்.—Shortened உ in the Terminations டு, று.

183. நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக

ரங்களுட், டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே. (கந)

**M. F** மென்றொடர்க் குற்றியலுகர வீற்றின்முன் நாற்கணமும்.—Four kinds of Initial Letters after shortened உ following Soft Consonants.

184. மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையிற், றம்மின வன்றொட ராகா மன்னே. (கச)

**F.** ஐயீற்றுக் குற்றியலுகரம்.—Final shortened உ Changed into ஐ.

185. ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே. (கரு)

**F.** குற்றுகரவீற்றுத் திசைப்பெயர்.—Words in shortened உ indicating Points of the Compass.

186. திசையொடு திசையும் பிறவுஞ் சேரின், நிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும், றகரம் னலவாத் திரிதலு மாம்பிற. (கசு)

**M. F.** தெங்கு என்னும் மொழிக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding தெங்கு.

187. தெங்குநீண் டீற்றுயிர் மெய்கெடுங் காய்வரின். (கஎ

**F.** எண்ணுப்பெயர்கள் (பொதுவிதி).—Nouns of Number, (General Rule).

188. எண்ணிறை யளவும் பிறவு மெய்தி
ன், ஒன்று முதலெட் டீறு மெண்ணுள், முத
லீறெண்முத னீளு மூன்று, நேழ்குறு கும்மா
றேழல் லவற்றின், ஈற்றுயிர் மெய்யுமேழ
னுயிரும், ஏகு மேற்புழி யென்மனார் புலவர். ()

**F.** ஒன்று இரண்டு என்னும் மொழிகளுக்குச் சிறப்புவிதி.—
Special Rule regarding ஒன்று and இரண்டு.

189. ஒன்றன் புள்ளி ரகர மாக, இரண்ட
னொற்றுயி ரேகவுவ் வருமே. (௲௯)

**F.** மூன்று என்னும் மொழிக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding மூன்று.

190. மூன்றனுறுப் பழிவும் வந்தது மா
கும். (சுO)

**F.** நான்கு என்னும் மொழிக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding நான்கு.

191. நான்கன் மெய்யே லறவா கும்மே. ()

**F.** ஐந்து என்னும் மொழிக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding ஐந்து.

192. ஐந்தனொற் றடைவது மினமுங் கேடும். (சஉ)

**F.** எட்டு என்னும் மொழிக்குச சிறப்புவிதி.—Special Rule regarding எட்டு.

193. எட்ட னுடம்பு ணவ்வாகு மென்ப.()

**F.** ஒன்பது என்னும் மொழி பத்து, நூறு என்பவற்றோடு புணருஞ் சிறப்புவிதி.— Special Rule regarding ஒன்பது before பத்து and நூறு.

194. ஒன்பா னொடுபத்து நூறு மொன்றின், முன்னதி னேனைய முரணி யொவ்வொடு, தகர நிறீஇப் பஃது தகற்றி னவ்வை, நிரலே ணளவாத் திரிப்பது நெறியே. (சச)

**F.** மூன்று முதலிய எட்டு எண்களின்முன் பத்து.—Special Rule regarding பத்து after Numeral Adjectives மூன்று to எட்டு.

195. முதலிரு நான்கா மெண்முனர்ப்பத்தின், இடையொற் றேக லாய்த மாகல், எனவிரு விதியு மேற்கு மென்ப. (சரு)

பது, பஃது ஈறாறு என்றப் பெயர்களுக்குச் சிறப்புவிதி.—
Special Rule regarding Compounds ending
in பத்து or பஃது.

196. ஒருபஃ தாதிமுன் னொன்றுமுத
லொன்பான், எண்ணு மவையூர் பிறவு மெய்
தின், ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே. (சகூ)

பத்தின்முன்னும் ஒன்பதின்முன்னும் மற்ற எண்கள்.—Special
Rule regarding பத்து and ஒன்பது before
other Numbers.

197. ஒன்றுமுத லீரைந் தாயிரங் கோடி,
எண்ணிறை யளவும் பிறவரிற் பத்தின், ஈற்
றுயிர் மெய்கெடுத் தின்னு மிற்றும், ஏற்பதே
ற்கு மொன்பது மினைத்தே (சஎ)

பத்து என்னும் மொழிமுன் இரண்டு வருவதற்குச் சிறப்புவிதி.—
Special Rule regarding பத்து before இரண்டு.

198. இரண்டு முன்வரிற் பத்தினீற் றுயிர்
மெய், கரந்திட வொற்று னவ்வாகு மென்ப. ()

ஒன்பது ஒழிந்த மற்ற எண்கள் இரட்டித்தலுக்குச்சிறப்புவிதி.
Special Rule regarding Numerals
Doubled.

199. ஒன்ப தொழித்தவெண் ணொன்பது

பிரட்டின், முன்னதின் முன்னல வோடவுயிர்
வரின், வவ்வு மெய்வரின் வந்தது மிகனெறி. ()

## ஊகாரவீற்றுப்புணர்ச்சி.—COMBINATION OF FINAL ஊ.

**F.** பூ வென்னும் மொழிக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding பூ.

200. பூப்பெயர் முன்னின மென்மையுந்
தோன்றும். (௫0)

## ஏகாரஓகாரவீற்றுப்புணர்ச்சி.—COMBINATION OF FINAL ஏ AND ஓ.

201. இடைச்சொல் லேயோ முன்வரி
னியல்பே. (௫௧)

## ஐகாரவீற்றுப்புணர்ச்சி.—COMBINATION OF FINAL ஐ.

ஐகாரவீற்றின்முன் நாற்கணமும்.—Four kinds of Initial Letters after Final ஐ.

202. வேற்றுமை யாயினைகா னிறுமொழி,

ஈற்றழி வோடுமெம் மேற்பவு முளவே. (ருக)

பனை என்றமை மொழிச்குச் சிறப்புவிதி.—Special Rule regarding பனை.

203. பனைமுன் கொடிவரின் மிகலும் வலி வரின், ஐபோ யம்முந் திரள்வரினுறழ்வும், அட்டுறி னைகெட்டந் நீள்வுமாம் வேற்றுமை.()

உயிரீற்றுப் புணரியல் முற்றுப்பெற்றது.

---

## ௨. மெய்யீற்றுப்புணரியல்.

## COMBINATION OF CONSONANT FINALS.

---

### மெய்யீற்றின்முன் உயிர்.

### CONSONANT FINALS BEFORE VOWELS.

---

**M. F.** பொதுவிதி.—General Rule.

204. உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே. (க)

**M. F.** தனிக்குறி லொற்றின்முன் உயிர்.— Consonant Finals following Short Vowels before Vowel Initials.

205. தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும். (௨)

---

## மெய்யீற்றின்முன் மெய்.

## CONSONANT FINALS BEFORE CONSONANT INITIALS.

---

**F.** யகரம ஒழிந்த பதத மெய்களின் முன் யகரம்.—Consonant Finals before Initial ய்.

206. தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரம், துன்னு மென்று துணிநருமுளரே. (௩)

முதனிலைத் தொழிற்பெயர்க்கும் ஏவலுக்கும.—Certain Verbal Root Nouns and Imperatives with Consonant Finals.

207. ஞணநம லவளன வொற்றிறு தொழிற்பெயர், ஏவல் வினைநனி யவ்வன் மெய்வரின், உவ்வுறு மேவ லுறாசில சில்வழி. (௪)

நகரவீற்று முதனிலைத் தொழிற்பெயர்க்குச் சிறப்புவிதி.—Special Rule regarding Verbal Root Nouns ending in ந

208. நவ்விறு தொழிற்பெயாக் கவ்வுமாம் வேற்றுமை. (ரு)

---

## ணகர னகரவீறு.—CONSONANT FINALS, ண், ன்.

---

**M. F.** ணகர னகர ஈற்றின் இயல்பும் விகாரமும்.—Natural and Mutational Combinations of ண and ன Finals

209. ணனவல் லினம்வாட் டறவும் பிறவ ரின், இயல்பு மாகும் வேற்றுமைக் கல்வழிக், கனைத் துமெய் வரினு மியல்பா கும்மே. (சு)

**M. F.** ணகர னகர வீறுகேடு.—Where ண் and ன் Finals are dropped.

210. குறிலணை வில்லா ணனக்கள்வந்த, நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே. (எ)

ணகரவீற்றுச் சாதி குழூஉப் பெயர் முதலியவற்றிற்குச் சிறப்புவிதி.— Special Rule regarding certain Nouns ending in ண.

211. சாதி குழூ உப்பரண் கவண்பெய

ரிறுதி, இயல்பாம் வேற்றுமைக் குணவெண்
சாண்பிற, டவ்வா கலுமா மல்வழி யும்மே. (அ)

ணகரவீற்றுக் கிளைப்பெயருக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding certain Nouns ending in ண்.

212. ணஃகான் கிளைப்பெய ரியல்பு மஃ
கான், அடைவு மாகும் வேற்றுமைப் பொரு
ட்கே. (க)

மீன் என்னும் மொழிக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding மீன்.

213. மீன்றவ் வொடுபொரூஉம் வேற்று
மைவழியே. (க0)

F. தேன் என்னு மொழிக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding தேன்.

214. தேன்மொழி மெய்வரி னியல்பு
மென்மை, மேவினிறுதி யழிவும் வலிவரின்,
ஈறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி. (கக)

எகின் என்னு மொழிக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding எகின்.

215. மரமல் லெகின்மொழி யியல்பு மகரம்,
பருவவலிமெலி மிகலுமாகும். (கஉ)

குயின், ஊன் என்னுஞ் சொற்களுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding குயின் aud ஊன்.

216. குயினூன் வேற்றுமைக் கண்ணு மியல்பே. (கரு)

மின், பின, பன், கன் என்னும சொற்களுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding மின் பின் பன் aud கன்.

217. மின்பின் பன்கன் றொழிற்பெயரனை ய, கன்னவ் வேற்று மென்மையோ டுறழும். ()

**M. F.** தன், என், நின் என்னுஞ் சொற்களுக்குச் சிறப்புவிதி. Special Rule regarding தன், என், and நின்.

218. தன்னென் னென்பவற் றீற்றுனவ் வன்மையோ, டுறழு நின்னீ றியல்பா முறவே.

---

## மகர ஈறு.—CONSONANT FINAL ம்.

---

**M. F.** பொதுவிதி.—General Rule.

219. மவ்வீறொற் றழிந் துயிரீ றொப்பவும், வன்மைக் கினமாத் திரியவு மாகும். (கஞ)

**M. F.** சில மகர ஈற்றிற்குச் சிறப்புவிதி.—Special Rule regarding certain Consonant final ம்.

220. வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வும், அவ்வழி யுயிரிடை வரினியல்பும்முள.()

நும, தம, எம், நம என்னுஞ் சொற்களுக்குச் சிறப்புவிதி.—Special Rulo regarding நும, தம, and நம.

221. நுந்தம், எம்நம் மீறு மவ்வரு ஞநவே.

**F** அகம என்னுஞ் சொல்லுக்குச் சிறப்புவிதி.—Special Rulo regarding அகம்.

222. அகமுனர்ச் செவிகை வரினிடையன கெடும். (கக)

ஈம, கம, உரும என்னுஞ் சொற்களுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding ஈம, கம and உரும.

223. ஈமும், கம்மு முருமுந்தொழிற்பெயர் மானும், முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே. (உ0)

## ய ர ழ வீறு.—CONSONANT FINALS, ய் ர் & ழ்.

---

ய ர ழ வீற்றின்முன் வல்லினம்.—Hard Consonants after Consonant Finals ய், ர், ழ்

224. யரழ முன்னர்க் கசதப வல்வழி, இயல்பு மிகலு மாகும் வேற்றுமை, மிகலு மினத்தோ டுறழ்தலும் விதிமேல். (௨௧)

தமிழ் தாழ் என்னுஞ் சொற்களுக்குச் சிறப்பு விதி.—Special Rule regarding தமிழ் and தாழ்.

225. தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே, தாழுங் கோல்வந் துறுமே லற்றே. (௨௨)

M F. கீழ் என்னுஞ் சொல்லுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding கீழ்.

226. கீழின்முன் வன்மை விகற்பமு மாகும். (௨௩)



## லள வீறு.—CONSONANT FINALS ல் AND ள்.

---

**M. F.** பொதுவிதி.—General Rule.

227. லளவேற் றுமையிற் றடவுமல்வழி, அவற்றோடுறழ்வும் வலிவரி னாமெலி, மேவி னணவு மிடைவரி னியல்பும், ஆகு மிருவழி யானு மென்ப. (௨௪)

**F.** லள வீறு தகரத்தின்முன் ஆய்தமாதல்.—Consonant Finals ல் and ள் changed into ஃ.

228. குறில்வழி லளத்தவ் வணையி னாய்தம், ஆகவும் பெறூஉ மல்வழியானே. (௨௫)

**F.** லள வீறு தநக்கள்முன் கெடுதல்முதலியன.—Consonant finals ல் and ள் dropped before Words beginning in த and ந.

229. குறில்செறி யாலள வல்வழிவந்த, தகரந் திரிந்தபிற் கேடுமீ ரிடத்தும், வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின், இயல்புந் திரிபு மாவன வுளபிற. (௨௬)

லள வீற்றுத் தொழிற்பெயர்.—Verbal Nouns ending in ல் and ள்.

230. லளவிறு தொழிற்பெய ரீரிடத்து

முவ்வுரு, வலிவரி னல்வழி யியல்புமா வனவுள.

வல் என்னுஞ் சொல்லுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding வல்.

231. வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும், பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம். (உஅ)

நெல், செல், கொல், சொல் என்னுஞ் சொற்களுக்குச் சிறப்பு விதி.—Special Rule regarding நெல், செல், கொல் and சொல்.

232. நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும், அல்வழி யானும் றகர மாகும். ()

F. இல் என்னுஞ் சொல்லுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding இல்.

233. இல்லெ னின்மைச் சொற்கையடைய, வன்மை விகற்பமு மாகா ரத்தொடு, வன்மை யாகலு மியல்பு மாகும். (௩௦)

புள் வள் என்னுஞ் சொற்களுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding புள் and வள்.

234. புள்ளும் வள்ளுந் தொழிற்பெயரு மானும். (௩௧)

## வகரவீறு.—CONSONANT FINAL வ்.

வவ்வீற்றுச் சுட்டுப்பெயர்க்குச் சிறப்புவிதி.—Special Rule regarding Demonstratives ending in வ்.

235. சுட்டு வகரமு வின்முற முறையே,
ஆய்தமு மென்மையு மியல்பு மாகும். (௩௨)

F. தெவ் என்னுஞ் சொல்லுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding தெவ்.

236. தெவ்வென் மொழியே தொழிற்பெய
ரற்றே, மவ்வரின் வஃகான் மவ்வுமாகும். (௩௩)

---

## வருமொழிமுதலில் நிற்கும் த நக்கள் திரிபு.
## F. CHANGE OF INITIAL த் AND ந்.

237. னலமுன் றனவும் ணளமுன் டணவும், ஆகுந் தநக்க ளாயுங் காலே. (௩௪)

F. உயிரீற்றுப் புணரியலுள்ளும் இவ்வியலுள்ளுங் குறித்த வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding Casal Combinations referred to in this and the preceding Chapters.

238. உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும். (௩௫)

## புணரியல்களுக்காவதோர் புறனடை.

## AN EXCEPTIONAL CASE TO THE CHAPTERS ON COMBINATION.

239. இடையுரி வடசொலி னியம்பிய
கொளாதவும், போலிய மருவும் பொருந்திய
வாற்றிற், கியையப் புணர்த்தல் யாவர்க்கு
நெறியே. (௩௬)

மெய்யீற்றுப்புணரியல் முற்றுப்பெற்றது.

---

## ௫. உருபு புணரியல்.

## COMBINATION OF CASAL PARTICLES.

---

### உருபுகள்.

### CASAL PARTICLES.

---

எட்டு உருபுகளும சாரும் இடவகையாலாகிய உருபுகளின் தொகை.—Number of Casal Particles.

240. ஒருவ னொருத்தி பலரொன் று பல
வென, வருபெய ரைந்தொடு பெயர்முத லிரு
நான், குருபு முறழ்தர நாற்பதா முருபே. (௧)

வேற்றுமை யுருபுகள் வருவதற்குக் காரணமும் வரும்இடமும்.—
The Position and Use of Casal Particles.

241. பெயர்வழித் தம்பொரு டரவரு முருபே. (உ)

**M. F.** ஐ முதலிய ஆறு உருபுகளின் புணர்ச்சி.—Combination of Casal Particles.

242. ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின், ஒக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே. (௩)

---

## சாரியை.

## EUPHONIC PARTICLES.

---

**M. F.** சாரியைவருமாறு.—The use of Euphonic Particles.

243. பதமுன் விகுதியும் பதமு முருபும், புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை, வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும். (௪)

**F.** பொதுச்சாரியை.—General Euphonic Particles.

244. அன் ஆன் இன் அல் அற்றிற் றத்

நம், தம்நம் நும்என அஉ ஐகுன, இன்ன பிற
வும் பொதுச் சாரியையே. (௫)

## உருபு புணர்ச்சிச் சிறப்புவிதி.

## SPECIAL RULE REGARDING THE COMBINATION OF CASAL PARTICLES.

**M. F.** எல்லாம் என்னுஞ் சொல்லுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding எல்லாம்.

245. எல்லா மென்பதிழி திணை யாயின்,
அற்றோ டுருபின் மேலும்முறுமே, அன்றே
னம்மிடை யடைந்தற் றுகும். (௬)

எல்லாரும எல்லீரும என்னுஞ் சொற்களுக்குச் சிறப்புவிதி.
Special Rule regarding எல்லாரும and எல்லீரும.

246. எல்லாரு மெல்லீரு மென்பவற்
றும்மை, தள்ளி நிரலே தம்நும் சாரப், புல்லு
முருபின் பின்னரும்மே. (௭)

**M. F.** தான், தாம, நாம, யான், யாம, நீ, நீர், என்னுஞ் சொற்களுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding தான், தாம, நாம, யான், யாம, நீ, and நீர்,

247. தான் தாம் நாம்முதல் குறுகும் யா

ன்யாம், நீநீர் என் எம் நின்று மாம்பிற, குவ்வி
னவ்வரு நான்கா றிரட்டல. (௮)

ஆ, மா, கோ என்னுஞ் சொற்களுக்குச் சிறப்புவிதி.—Special
Rule regarding ஆ, மா, and கோ.

248. ஆமா கோனவ் வணையவும் பெறு
மே. (௯)

பது ஈற்று என்னும் பெயர்களுக்குச் சிறப்புவிதி.—Special
Rule regarding Numbers ending in பது.

249. ஒன்று முதலெட்டீறு மெண்ணூர்,
பத்தின்முன் ஆன்வரிற் பவ்வொற் றொழிய
மேல், எல்லாமோடு மொன்பது மிற்றே. (௧௦)

**M. F.**—வகரவீற்றுச் சுட்டுப்பெயர்களுக்குச் சிறப்புவிதி.—
Special Rule regarding Demonstratives
ending in வ்.

250. வவ்விறுசுட்டிற் கற்றுறல் வழியே.

**F.** அஃது, இஃது, உஃது என்னுஞ் சொற்களுக்குச் சிறப்புவிதி
Special Rule regarding அஃது, இஃது, and உஃது.

251. சுட்டின்முன் னாய்த மன்வரிற் கெடு
மே. (௧௨)

**M. F.** அகர ஈறுச் சொற்களுக்கு முன்வரும அத்துச்சாரியையின் முதல் அகரக்கேடு.—The Euphonic Particle அத்து dropsits iuitial அ after final அ.

252. அத்தி னகர மகரமுனை யில்லை (கங)

சாரியைகளை அறியும வகை.—How to find out Euphonic Particles.

253. இதற்கிது சாரியை யெனினள வின்மையின், விகுதியும் பதமு முருபும் பகுத்திடை, நின்ற வெழுத்தும் பதமுமியற்கையும், ஒன்ற வுணர்த்த லுரவோர் நெறியே. (கச)

விகுதி, பதம், சாரியை, உருபு என்னும நால்வகைப் புணர்ச்சிக்கும புறனடை —General Remarks regardiug the Combinations of final Particles, Words, Euphonic and Casal Particles.

254. விகுதி பதஞ்சா ரியைபுரு பனைத்தினும், உரைதத விதியினோர்ந் தொப்பன கொளலே. (கரு)

**M. F.** இரண்டாம வேற்றுமைச் சிறப்புவிதி.—Special Rule regarding the Second Case.

255. இயல்பின் விகாரமும் விகாரத்தியல்

பும், உயர்திணை யிடத்து விரிந்துந் தொக்கும், விரவுப் பெயரின் விரிந்து நின்றும், அன்ன பிறவு மாகுமையுருபே. (௧௬)

மூன்றும் வேற்றுமைக்குச் சிறப்புவிதி —Special Rule regarding the Third Case.

256. புள்ளியு முயிரு மாயிறு சொன்முன், தம்மினாகிய தொழின்மொழி வரினே, வல்லி னம் விகற்பமு மியல்புமாகும். (௧௭)

எழுத்ததிகாரத்திறப் புறனடை.—General Remarks on the foregoing Chapters on Orthography.

257. இதற்கிது முடிபென் றெஞ்சா தியாவும், விதிப்பள வின்மையின் விதித்தவற் றியலான், வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே. (௧௮)

## உருபுபுணரியல் முற்றிற்று.

---

கட்டளைக்கலித்துறை.

அடையெண்பெயர்முறைதோற்றம்வடிவளவாதியந்தம், இடைநிலை போலியென் றீரைந் தெழுத்து மிருபதமும், பஙபுணர் மூன்றி னிய

ல்பும் விகாரமுஞ் சாரியையும், உடனுணர்வா
ரை யெழுத்தறி வாரெனப ருத்தமரே.

## எழுத்ததிகாரம் முற்றிற்று.

---



# உ. சொல்லதிகாரம்.

# ETYMOLOGY.

## க. பெயரியல்.

## ON NOUNS.

கடவுள்வணக்கம்.—Invocation.

258. முச்சக னிழற்று முழுமதி முக்குடை,
அச்சுத னடிதொழு தறைகுவன்சொல்லே. (க)

### க. சொல்லின் பொதுவிலக்கணம்.

### GENERAL CHARACTERISTICS OF WORDS.

**M. F.** சொல்.—Word Defined.

259. ஒருமொழி தொடர்மொழி பொது
மொழி யென்று, இருதிணை யைம்பாற் பொரு
ளையுந் தன்னையும், மூவகை யிடத்தும் வழக்
கொடு செய்யுளின், வெளிப்படை குறிப்பின்
விரிப்பது சொல்லே. (உ)

**M. F.** மூவகை மொழிகள். – Three kinds of Words Defiued

260. ஒருமொழி யொருபொரு ளனவாந் தொடர்மொழி, பலபொரு ளனபொது விரு மையு மேற்பன. (௩)

**M. F.** இருதிணை.—The Two Classes (Personal and Impersonal) Defined.

261. மக்க டேவர் நரக ருயர்திணை, மற்று யிருள்ளவு மில்லவு மஃறிணை. (௪)

**M. F.** உயர்திணையின் பாற்பிரிவு —Sub-Divisions of the Personal Class.

262. ஆண் பெண் பலரென முப்பாற் றுயர்திணை. (௫)

**M. F.** அஃறிணையின் பாற்பிரிவு.—Sub-Divisions of the Impersonal Class.

263. ஒன்றே பலவென் றிருபாற் றஃறி ணை. (௬)

**F.** திணைபால்களுக்குப் புறனடை.—A Remark on the Personal and Impersonal Classes, and their Sub-divisions, (Epicenes.)

264. பெண்மைவிட் டாணவா வுவபேட

ண்பால், ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்
பால், இருமையு மஃறிணை யன்னவுமாகும். (௭)

**M. F.** மூன்றிடத்திலுந் சொல் தன்னையும் பொருளையும் உண ர்த்துதல்.—Words in the three Persons express their respective Person, Class, Gender and Number.

265. படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்
பிற், பெறப்படுந் திணைபா லனைத்துமேனை,
இடத்தவற் றொருமைப் பன்மைப் பாலே. (௮)

**M. F.** மூவிடம்.—The three Persons.

266. தன்மை முன்னிலை படர்க்கைமூ
விடனே. (௯)

**M. F.** வழக்கு.—Prose Defined.

267. இலக்கண முடைய திலக்கணப்போ
லி, மரூஉவென் றாகு மூவகை யியல்பும், இட
க்க ரடக்கன் மங்கலங் குழூஉக்குறி, எனுமுத்
தகுதியோ டாறும் வழக்கியல். (௧0)

செய்யுள்.—Poetry Defined.

268. பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல, சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின், வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள். (கக)

F. குறிப்பும் வெளிப்படையும்—Ambiguous and unambiguous, or indirect and direct Expressions.

269. ஒன்றொழி பொதுச்சொல் விகாரந் தகுதி, ஆகு பெயரன் மொழிவினைக் குறிப்பே, முதறொகை குறிப்போ டின்ன பிறவும், குறிப்பிற் றருமொழி யல்லன வெளிப்படை. (கஉ)

---

## உ. சொல்லின்பிரிவு.

## KINDS OF WORDS.

---

M. F. சொற்களின் வகை.—Parts of Speech.

270. அதுவே, இயற்சொற் றிரிசொலியல் பிற் பெயர்வினை, எனவிரண் டாகு மிடையுரி யடுத்து, நான்கு மாந்திசைவட சொலணுகா வழி.

**M.F.** இயற்சொல்.--Unequivocal (or Natural) Words.

271. செந்தமி ழாகித் திரியா தியார்க்கும்,
தம்பொருள் விளக்குந் தன்மைய வியற்சொல்.

**M. F.** திரிசொல்.—Equivocal (or Variable) Words.

272. ஒருபொருள் குறித்த பலசொல்
லாகியும், பலபொருள் குறித்த வொருசொல்லா
கியும், அரிதுணர் பொருளன திரிசொல்லா
கும். (கரு)

**F.** திசைச்சொல்.— Provincials.

273. செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நில
த்தினும், ஒன்பதிற் றிரண்டினிற் றமிழொழி
நிலத்தினும், தங்குறிப்பினவே திசைச்சொல்
லென்ப. (கசா)

**F.** வடசொல்.—Sanscrit Derivatives.

274. பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழு
த்தானும், ஈரெழுத் தானு மியைவன வட
சொல். (கஎ)

## ௩. பெயர்ச்சொல்.

## NOUN.

**M. F.** பெயர்.—Noun Defined.

275. இடுகுறி காரண மரபோ டாக்கம், தொடர்ந்து தொழிலல காலந் தோற்றா, வேற் றுமைக் கிடனாய்த் திணைபாலிடத்தொன், றே ற்பவும் பொதுவு மாவன பெயரே. (கஅ)

உயர்திணை ஆண்பாற்பெயர்.—Masculine Nouns.

276. அவற்றுள், கிளையெண் குழூஉமுதற் பலபொரு டிணைதேம், ஊர்வா னகம்புறமுதல நிலன்யாண், டிருது மதிநா ளாதிக் காலம், தோள்குழன் மார்புகண் காது முதலுறுப், பள வறி வொப்புவடிவு நிறங்கதி, சாதி குடிசிறப் பாதிப் பல்குணம், ஓதலீத லாதிப் பல்வினை, இவையடை சுட்டு வினாப்பிற மற்றோ, டுற்ற னவ்வீறு நம்பியாடூஉ, விடலை கோவேள் குரிசி றோன்றல், இன்னன வாண்பெய ராகுமென்ப.

உயர்திணைப் பெண்பாற் பெயர்.—Feminine Nouns.

277. கிளைமுத லாகக் கிளந்த பொருள்

களுள், எவ்வொற் றிகரக் கேற்ற வீற்றவும்,
தோழி செவிலி மகடூஉ நங்கை, தையலோடின்
னன பெண்பாற் பெயரே. (உ0)

உயர்திணைப் பலர்பாற்பெயர்.—Personal Plural Nouns.

278. கிளந்த கிளைமுத லுற்றரவ் வீற்றவு
ம், கள்ளொ னீற்றி னேற்பவும் பிறவும், பல்
லோர் பெயரின் பகுதியாகும். (உக)

அஃறிணை ஒன்றன்பாற்பெயர்.—Singular Impersonal Nouns.

279. வினைச்சுட் டெனும் வேறுமாம் பொ
ருள், ஆதி யுறுதுச் சுட்டணையாய்தம், ஒன்ற
னெண் ணின்னன வொன்றன் பெயரே.(உஉ)

அஃறிணைப் பலவின்பாற பெயர்.—Plural Impersonal Nouns.

280. முன்ன ரவ்வொடு வருவை யவ்வும்,
சுட்டிறு வவ்வுங் கள்ளிறு மொழியும், ஒன்ற
லெண்ணு முள்ளவில்ல, பல்லசில்ல வுளவில
பலசில, இன்னவும் பலவின் பெயராகும்மே.

M. F. பால்பகா வஃறிணைப் பெயர்.—Common Impersonal Nouns.

281. பால்பகா வஃறிணைப் பெயர்கள் பாற் பொதுமைய. (உச)

இருதிணைப் பொதுப்பெயர்.—Common Class Nouns

282. முதற்பெயர் நான்குஞ் சினைப்பெயர் நான்கும், சினைமுதற் பெயரொரு நான்கு முறை யிரண்டும், தன்மை நான்கும் முன்னிலை யைந்தும், எல்லாந் தாந்தா னின்னன பொதுப் பெயர். (உரு)

முதற்பெயர் முதலியவற்றை வகுத்தல்.—Sub-Divisions of Common Class Nouns according to Gender and Number.

283. ஆண்மை பெண்மை யொருமை பன்மையின், ஆமந் நான்மைக ளாண்பெண் முறைப்பெயர். (உசா)

திணைப்பொதுப்பெயர்கள் பாற்பொதுவாதல்.—Common Class Nouns become common as regards their respective Genders.

284. அவற்றுள், ஒன்றே யிருதிணைத் தன் பாலேற்கும். (உஎ)

**M. F.** தன்மை முன்னிலை படர்க்கைப் பெயர்கள்.—The Pronouns and their Persons.

285. தன்மை யானென் யாநா முன்னிலை,
எல்லிர் நீயிர் நீவிர் நீர்நீ, அல்லன படர்க்கை
யெல்லா மெனல் பொது. (உஅ)

**M.** தொழிற்பெயருக்குமு வினையாலணையும் பெயருக்குமு இடம்.
Verbal Nouns and their Persons.

286. வினையின் பெயரே படர்க்கை வினை
யா, லணையும் பெயரே யாண்டு மாகும். (உகூ)

**M. F.** தான்முதலிய பொதுப்பெயர்களுக்குப் பால் வகுப்பு
The Pronouns and their Number.

287. தான்யா னானீ யொருமை பன்மை
தாம், யாநா மெலா மெலீர் நீயிர்நீர் நீவிர். (௩0)

**M. F.** எண்ணால் வருமு உயர்திணைப்பெயர்கள்.—Personal Nouns formed from Numerals.

288. ஒருவ னொருத்திப் பெயர்மே லெண்
ணில. (௩௧)

**M. F.**

289. ஒருவரென்ப துயரிரு பாற்றாய்ப்,
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப.

F. ஆகுபெயர்.—Metonymy.

290. பொருண்முத லாறோ டளவை சொ
ற்றானி, கருவி காரியங் கருத்த னாதியுள், ஒன்
றன்பெயரா னதற்கியை பிறிதைத், தொன்மு
றை யுரைப்பன வாகுபெயரே. (௬௬)

---

## வேற்றுமை.

## CASES.

---

M. F. வேற்றுமை.—Case Defined.

291. ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீறாய்
ப்பொருள், வேற்றுமை செய்வன வெட்டே
வேற்றுமை. (௬௭)

M. F. வேற்றுமையின் பெயரும் முறையும்.—The Names and Order of Cases.

292. பெயரே ஐஆல் குஇன் அதுகண்,
விளியென் றாகு மவற்றின் பெயர்முறை. (௬௮)

M. F. எழுவாயுருபு மற்றை யுருபுகளையேற்றல்.—The Six Casal Signs attached to the Nominative.

293. ஆறனுருபு மேற்குமவ் வுருபே. (௬௯)

கொடை பகை நேர்ச்சி தகவது வாதல், பொ
ருட்டு முறை யாதியி னிதற்கிதெனல் பொரு
ளே. (சுக)

**M. F.** ஐந்தாம் வேற்றுமை.—The 5th Case.

299. ஐந்தா வதனுரு பில்லு மின்னும், நீங்
கலொப் பெல்லை யேதுப் பொருளே. (சுஉ)

**M. F.**—ஆறாம் வேற்றுமை.—The 6th or Genitive Case.

300. ஆறனொருமைக் கதுவு மாதுவும், பன்
மைக் கவ்வு முருபாம் பண்புறுப், பொன்றன்
கூட்டம் பலவி னீட்டந், திரிபி னாக்க மாந்தற்
கிழமையும், பிறிதின் கிழமையும் பேணுதல்
பொருளே. (சுங)

**M. F.** ஏழாமவேற்றுமை.—The 7th or Locative Case.

301. ஏழ னுருபுகண் ணாதியாகும், பொரு
ண்முத லாறு மோரிரு கிழமையின், இடனாய்
நிற்ற லிதன்பொரு ளென்ப. (சுச)

**F.** ஏழாம்வேற்றுமையுருபுகள்.—The Signs of the 7th Case.

302. கண்கால் கடையிடை தலைவாய்

திசைவயின், முன்சார் வலமிடமேல்கீழ் புடை
முதல், பின்பாடளேதே முறைவழி யுழியுளி,
உள்ளகம் புறமில் லிடப்பொரு ளுருபே. (சரு)

**M. F.** விளிவேற்றுமை.—The 8th or Vocative Case.

303. எட்ட னுருபே யெய்துபெயரீற்றின்,
றிரிபு குன்றன் மிகுத லியல்பயல், திரிபுமாம்
பொருள் படர்க்கை யோரைத், தன்முகமாகத்
தானழைப்பதுவே. (சசு)

விளிக்கப்படுபெயர்கள்.—Nouns which admit of the Vocative Case.

304. இ உ ஊ வோ டையோ னளரல,
யவ்வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு,
ண ஃகா னுவீ றுகும் பொதுப்பெயர், ஞநவொ
ழியனைத்தீற் றஃறிணை விளிப்பன. (சஎ)

**F.** பொதுவிளியுருபு.—General Vocative Signs.

305. இம்முப் பெயர்க்கண் ணியல்பு
மேயும், இகர நீட்சியு முருபாமன்னே. (சஅ)

F. ஐகாரவீற்றுப் பெயர்களின் விளியுருபு.—Vocative Signs of Nouns ending in ஐ

306. ஐயிறு பொதுப்பெயர்க் காயு மாவும், உருபா மல்லவற் றுயு மாகும். (௩௬)

னகரவீற்றுயர்திணைப் பெயர்களின் விளியுருபு.—Vocative Signs of Personal Nouns ending in ன்.

307. ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண், அளபீ றழிவய னீட்சி யதனோ, டீறு போத லவற்றோ டோவுறல், ஈறழிந் தோவுற லிறுதியவ்வாதல், அதனோ டயறிரிந் தேயுற லீறழிந், தயலே யாதலும் விளியுரு பாகும். ()

ளகரவீற்றுயர்திணைப் பெயர்களின் விளியுருபு.—Vocative Signs of Personal Nouns ending in ள்.

308. ளஃகா னுயர்பெயர்க் களபீ றழிவயல், நீட்சி யிறுதி யவ்வொற் றுதல், அயலில் கரமே யாதலும் விளித்தனு. (௫௧)

ரகரவீற்றுயர்திணைப் பெயர்களின் விளியுருபு.—Vocative Signs of Personal Nouns ending in ர்.

309. ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ லீற் றயல், அகரம் இஈ யாத லாண்டையா, ஈயாத

மையின், அளபும் புலம்பி ரேவுமாகும். (ருசு)

**F.** விளிக்கப்படாப் பெயர்கள்.—Nouns which do not admit of the Vocative Case.

314. நுவ்வொடு வினுச்சுட்டுற்ற னளர, வைதுத் தாந்தா னின்னனை விளியா. (ருஎ)

**F.** முதற்சினைப் பெயர்களில் ஐ, அது, கண், என்னு மூன்றுருபுகளும் வருமாறு.—Special Rule regarding the use of the Casal Signs ஐ, அது, and கண் in Nouns expressing whole and its parts.

315. முதலை யையுறிற் சினையைக் கண்ணுறும், அதுமுதற் காயிற் சினைக்கை யாகும். ()

**F.** முதல் சினை யென்பன உரைப்போர் குறிப்பினுள்ளன.—The whole and part have no separate existence: they are only distinguished in the mind of the speaker.

316. முதலிவை சினையிவை யெனவேறுளவில, உரைப்போர் குறிப்பின வற்றே பிண்டமும். (ருக)

**M. F.** வேற்றுமை மயக்கம்.—Interchange of Cases.

317. யாதனுருபிற் கூறிற்றுயினும், பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும். (கூ0)

யதனோ டேயுற வீற்றே, மிக்கயல் யாக்கெட்
-தனய னீடல், ஈற்றி னீருற லிவையுமீண்
டுருபே. (௩உ)

**F** லகர யகரவீற் றுயர்திணைப் பெயர்களின் விளியுருபு.—
Vocative Signs of Personal Nouns ending
in ல் and ய்.

310. லகாரவீற் றுயர்பெயர்க் களபய னீட்
சியும், யகார வீற்றிற் களபுமா முருபே. (௩௩)

**M. F.** னகரவீற் றஃறிணைப்பெயர் பொதுப்பெயர்களின் விளி
யுருபு.—Vocative Signs of Impersonal and
Common Class Nouns ending in ன்.

311. னவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்
கண், இறுதி யழிவத னோடய னீட்சி. (௩௪)

லகர ளகரவீற் றஃறிணைப்பெயர் பொதுப்பெயர்களின் விளி
யுருபு —Vocative Signs of Impersonal and
Common Class Nouns ending in ல் and ள்.

312. லளவீற் றஃறிணைப்பெயர் பொதுப்
பெயர்க்கண், ஈற்றய னீட்சியு முருபா கும்மே.

**M. F.** விளியுருபுகளுக்குப் புறனடை.—A Remark on
Vocative Signs.

313. அண்மையி னியல்புமீ றழிவுஞ் சேய்

மையின், அளபும் புலம்பி ஞேவுமாகும். (௫௬)

**F.** விளிக்கப்படாப் பெயர்கள்.—Nouns which do not admit of the Vocative Case.

314. நுவ்வொடு வினாச்சுட்டுற்ற னளர, வைதுத் தாந்தா னின்னன விளியா. (௫௭)

**F.** முதற்சினைப் பெயர்களில் ஐ, அது, கண், என்னு மூன்றுருபுகளும் வருமாறு.—Special Rule regarding the use of the Casal Signs ஐ, அது, and கண் in Nouns expressing whole and its parts.

315. முதலை யையுறிற் சினையைக் கண்ணுறும், அதுமுதற் காயிற் சினைக்கை யாகும். ()

**F.** முதல் சினை யென்பன உரைப்போர் குறிப்பினுள்ளன.—The whole and part have no separate existence: they are only distinguished in the mind of the speaker.

316. முதலிவை சினையிவை யெனவே றுளவில, உரைப்போர் குறிப்பின வற்றே பிண்டமும். (௫௯)

**M. F.** வேற்றுமை மயக்கம்.—Interchange of Cases.

317. யாதனுருபிற் கூறிற்றாயினும், பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும். (௯0)

ஐ,ஆன், கு, இவ்வேற்றுமையுருபுகள் செய்யுளில் திரிந்துவருதல்.
Poetical License regarding the Casal Signs
ஐ, ஆன் and கு.

318. ஐயான் குச்செய்யுட் கவ்வு மாகும்,
ஆகா வஃறிணைக் கானல் லாதன. (கூக)

**M. F.** எட்டு வேற்றுமைகளுக்கும் முடிக்குஞ்சொல்.—
Government of Case.

319. எல்லை யின்னு மதுவும் பெயர்கொ
ளும், அல்ல வினைகொளு நான்கே ழிருமையும்,
புல்லும் பெரும்பாலு மென்மனார் புலவர். (கூஉ)

பெயரியல் முற்றிற்று.

---

## உ. வினையியல்.

## ON VERBS.

---

**M. F.** தெரிநிலை வினைச்சொல்லின் பொதுவிலக்கணம்.—
Verb Defined.

320. செய்பவன் கருவி நிலஞ்செயல் கால
ம், செய்பொரு ளாறுந் தருவது வினையே. (க)

**M. F.** குறிப்புவினைச்சொல்லின் பொதுவிலக்கணம்.
Indefinite Verbs Defined.

321. பொருண்முத லாறினுந் தோற்றி

முன் னுறனுள், வினைமுதன் மாத்திரை விளக்கல் வினைக் குறிப்பே. (உ)

**M. F.** வினைச்சொற்களின் பகுப்பு, [முற்று, எச்சம்].— Sub-Division of Verbs into Finite Verbs and Participles.

322. அவைதாம், முற்றும் பெயர்வினை யெச்சமு மாகி, ஒன்றற் குரியவும் பொதுவுமாகும். (௩)

---

## க. முற்றுவினை.

## FINITE VERBS.

**M. F.** முற்றுவினையின் இலக்கணம்.—Finite Verbs Defined.

323. பொதுவியல் பாறையுந் தோற்றிப் பொருட்பெயர், முதலறு பெயரல தேற்பில முற்றே. (௪)

தெரிநிலைமுற்றின் விகற்பங்கள் 27.—27 Kinds of Finite Verbs by Inflection on account of Person, Tense, Number and Gender (பால்.)

324. ஒருவன்முத லைந்தையும் படர்க்கை யிடத்தும், ஒருமைப் பன்மையைத் தன்மை

றன்னிலையிலும், முக்காலத்தினு முரணமுறை ய, மூவைந் திருமூன் றுருய் முற்று, வினைப் பத மொன்றே மூவொன் பானும். (௫)

**M. F.** ஆண்பாற் படர்க்கை வினைமுற்று.—Masculino Finite Verbs.

325. அன்னா னிறுமொழி யாண்பாற் பட ர்க்கை. (௬)

**M. F.** பெண்பாற் படர்க்கை வினைமுற்று.—Femenine Finite Verbs

326. அள்ளா ளிறுமொழி பெண்பாற் படர்க்கை. (௭)

**M. F.** பலர்பாற் படர்க்கை வினைமுற்று.—Personal Plural Finite Verbs.

327. அர் ஆர் பவ்வூ ரகரமா ரீற்ற, பல் லோர் படர்க்கைமார் வினையொடு முடிமே. (௮)

**M. F.** ஒன்றன்பாற் படர்க்கை வினைமுற்று.—Impersonal Singular Finite Verbs.

328. துறுடுக் குற்றியலுகர வீற்ற, ஒன் றன் படர்க்கை டுக்குறிப்பி னாகும். (௯)

**M. F.** பலவின்பாற் படர்க்கை வினைமுற்று.—Impersonal Plural Finite Verbs.

329. அ ஆ வீற்ற பலவின் படர்க்கை,

ஆவே யெதிர்மறைக் கண்ணதாகும். (௬0)

**F.** இருதிணைப் பொதுவினை.—Verbs common to both Personal and Impersonal Classes.

330. தன்மை முன்னிலை வியங்கோள் வேறிலை, உண்டீ ரெச்ச மிருதிணைப் பொது வினை. (௬௧)

**M. F.** தன்மையொருமை வினைமுற்று.—First Person Singular Finite Verbs.

331. குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமோ, டல்ல னென்னே னாகு மீற்ற, இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை. (௬௨)

**M. F** உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்று.—First Person Comprehensive Plural Finite Verbs.

332. அம்மா மென்பன முன்னிலையாரையும், எம்மே மோமிவை படர்க்கை யாரையும், உம்மூர் கடதற விருபா லாரையும், தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை. (௬௩)

தன்மை வினைமுற்றுகள் (செய்கு, செய்கும்).—Special Rule regarding First Person Finite Verbs செய்கு and செய்கும்.

333. செய்கெ னொருமையுஞ் செய்குமென்
ன்மையும், வினையொடு முடியினும் விளம்பிய
றற்றே. (கச)

**M. F.** உளப்பாட்டு முன்னிலைப் பன்மை வினைமுற்று.
Second Person Comprehensive Plural Finite Verbs.

334. முன்னிலை கூடிய படர்க்கையு முன்
னிலை. (கரு)

**M. F.** முன்னிலை யொருமை வினைமுற்று.—Second Person Singular Finite Verbs.

335. ஐயா யிகர வீற்ற மூன்றும், ஏவலின்
வரூஉ மெல்லா வீற்றவும், முப்பாலொருமை
முன்னிலை மொழியே. (கசா)

சில வேவல்வினைமுற்றுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding certain Imperative Verbs.

336. முன்னிலை முன்ன ரீயு மேயும், அந்
நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே. (கஎ)

M. F. முன்னிலைப் பன்மை வினைமுற்று.—Second Person Plural Finite Verbs.

337. இர்ஈ ரீற்ற விரண்டு மிருதிணைப், பன்மை முன்னிலை மின்னவற் றேவல். (கஅ)

M. F. வியங்கோள் வினைமுற்று.—Optative Verbs: (Common to all Persons and Numbers)

338. கயவொடு ரவ்வொற் றீற்ற வியங் கோள், இயலு மிடம்பா லெங்கு மென்ப.(கக)

M. F. பொதுக்குறிப்பு வினைமுற்று (வேறு, இல்லை, உண்டு.] Finitive Verbs வேறு, இல்லை and உண்டு: (Common to all Persons and Numbers)

339. வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன. (உ0)

---

## உ. பெயரெச்சம்.

## ADJECTIVES.

---

M. F. பெயரெச்சத்தின் இலக்கணம்.—Adjectives Defined.

340. செய்த செய்கின்ற செய்யுமென்பாட்டிற், காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொ

செய்வதாதி யறுபொருட் பெயரும், எஞ்ச
ற்பது பெயரெச்சம்மே. (உக)

[ F. செய்யுமென் னெச்சகுறிறருச் சிறப்புவிதி.—Special Rule regardir g the Adjective செய்யும.

341. செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய்
சேறலும், செய்யுளு ளும்முந் தாகலு முற்றேல்,
யிருமுயிர்மெய் யேகலு முளவே. (உஉ)

---

௯ வினையெச்சம்.

ADVERBS.

---

M. F. வினையெச்சத்தின் இலக்கணம்.—Adverbs Defined.

342. தொழிலுங் காலமுந் தோன்றிப் பா
ல்வினை, யொழிய நிற்பது வினையெச்சம்மே. ()

M. F. வினையெச்சவாய்பாடுகள்.—Adverbial Forms.

343. செய்து செய்பு செய்யாச் செய்யூச்,
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யிய
ர், வான்பான் பாக்கின வினையெச்சம் பிற,

ஐந்தொன் றாறுமுக்காலமு முறை தரும்.(௨௪)

**F.** வினையெச்சங்களின் முடிபுவேறுபாடு.Government of the different forms of Adverbs.

344. அவற்றுள், முதலினான்கு மீற்றின் மூன்றும், வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற. (௨௫)

**F.** 345. சினைவினை சினையொடு முதலொடுஞ் செறியும். (௨௬)

**F.** வினையெச்ச வாய்பாடுகளின் திரிபு.—Adverbial Forms Interchanged.

346. சொற்றிரி யினும்பொரு டிரியா வினைக்குறை. (௨௭)

## ௪. ஒழிபு.

## MISCELLANEOUS.

வினைக்குறிப்புக்கு ஆவதோர் சிறப்புவிதி.—A Special Rule regarding Indefinite Verbs.

317. ஆக்க வினைக்குறிப் பாக்கமின்றியமையா. (௨௮)

**M. F.** செய்யுமென் முற்றுவினைக்குச் சிறப்புவிதி.—

A Special Rule regarding the finite verbal form செய்யும.

348. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில், செல்லாதாகுஞ் செய்யுமென் முற்றே. (உகூ)

**M. F.** யார் என்னும் குறிப்புவினை முறறுக்குச் சிறப்புவிதி.—

A Special Rule regarding the Indefinite Verb யார.

349. யாரென் வினாவினைக் குறிப்புயர் முப்பால். (௩0)

**M. F.** எவன் என்னும் குறிப்புவினை முற்றுக்குச் சிறபபுவிதி.

A Special Rule regarding the Indefinite Verb எவன்.

350. எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால். (௩௧)

**M. F.** வினைமுறறுகளுக் காவதோர் சிறப்புவிதி.—

A Special Rule regarding finite verbs in general.

351. வினைமுற்றே வினையெச்ச மாகலும்' குறிப்பு முற்றீ ரெச்ச மாகலு முளவே. (௩௨)

**வினையியல் முற்றிற்று.**

---

# ரு. பொதுவியல்.

## ON WORDS IN GENERAL.

இது முன்வந்த பெயருக்கும் வினைக்கும், பின் வரும் இடைக்கும் உரிக்கும் பொது விலக்கணங்களைச் சிங்கநோக்காக அறிவிக்கும்படி நடுவே வைக்கப்பட்டது.

---

### க. பொதுவிதி.

### GENERAL RULES.

**F.** பாற் பொதுமை நீக்கல்.—Determination of Gender in Ambiguous Nouns and Verbs.

352. இருதிணை யாண்பெண்ணு ளொன்றனை யொழிக்கும், பெயரும் வினையுங் குறிப்பினானே. (க)

**M. F.** செய்யுளிடத்துச் சிலபெயர் வினையின் ஈற்றயல் ஆ ஓ ஆகத்திரிதல்.—Change of Termination ஆ into ஓ in certain Nouns and Verbs in Poetry.

353. பெயர்வினை யிடத்து னளரய வீற்றயல், ஆவோ வாகலுஞ் செய்யுளு ளுரித்தே. ()

உருபும் வினையும் எதிர்மறையிலும் திரியா.—Casal and Verbal Terminations common to both affirmative and negative forms.

354. உருபும் வினையு மெதிர்மறுத் துரைப்பினுந், திரியா தத்தமீற் றுருபினென்ப. (க)

**M. F.** உருபும் வினையும் அடுக்கி முடிதல்.—Several Casal Terminations or Verbs in a Sentence have but one Governing Word.

355. உருபுபலவடுக்கினும் வினைவேறடுக்கினும், ஒருதம் மெச்ச மீறுறமுடியும். (உ)

**M. F.** இடைப்பிறவரல்.—Adjuncts or Words interposed.

356. உருபு முற்றீ றெச்சங் கொள்ளும், பெயர்வினை யிடைப்பிற வரலுமா மேற்பன.()

**F.** முடிக்குஞ்சொற்கள் எச்சங்களின் பின்னும் வரும்.—Dependent words may also follow their principals.

357. எச்சப் பெயர்வினை யெய்து மீற்றி னும். (க)

**M. F.** ஒருமொழி தன்னினத்தையும் கொள்ளுதல்.—A word expressed also includes those understood.

358. ஒருமொழி யொழிதன் னினங்கொ ளற் குரித்தே. (எ)

**F.** பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும்வழி.—The Gender etc. of Epicene Nouns and Verbs determined by Governing Words.

359. பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும், மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினை தாமே. (அ)

எச்சங்களும் அவைகளின் முடிபுகளும்.—Defective forms and their Governing Words.

360. பெயர்வினை யும்மைசொற் பிரிப்பென வொழியிசை, எதிர்மறை யிசையெனுஞ் சொல்லொழி பொன்பதும், குறிப்புந் தத்த மெச்சங் கொள்ளும். (கூ)

---

## உ. தொகை நிலைத்தொடர் மொழிகள்.

## ELLIPTICAL COMBINATIONS.

---

தொகைநிலைத் தொடர்மொழி இலக்கணம்.—Elliptical Combinations Defined.

361. பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை, முதலிய பொருளி னவற்றி னுருபிடை, ஒழியவிரண்டு முதலாத் தொடர்ந்தொரு, மொழிபோ னடப்பன தொகைநிலைத் தொடர்சொல். (கo)

**M. F.** ஆறுவகைத் தொகைநிலைத் தொடர்கள்.—Six Kinds of Ellipses.

362. வேற்றுமை வினைபண் புவமை யும்மை, அன்மொழி யெனவத் தொகையா றாகும்.

**M. F.** வேற்றுமைத்தொகை.—Ellipsis of Casal Particles.

363. இரண்டு முதலா மிடையா றுருபும், வெளிப்பட லில்லது வேற்றுமைத் தொகையே. (கஉ)

**M. F.** வினைத்தொகை.—Ellipsis in Verbs.

364. காலங் கரந்த பெயரெச்சம் வினைத் தொகை. (கங)

**M. F.** பண்புத்தொகை.—Ellipsis of Adjectivo Particles.

365. பண்பை விளக்கு மொழிதொக் கனவும், ஒருபொருட் கிருபெயர் வந்தவுங் குணத் தொகை. (கச)

**M. F.** உவமைத்தொகை.—Ellipsis of Particles of Comparison.

366. உவமவுருபில துவமத்தொகையே.()

**F.** உவமை உருபுகள்.—Particles of Comparison.

367. போலப் புரைய வொப்ப வுறழ,
மானக் கடுப்ப வியைய வேய்ப்ப, நேர நிகர
வன்ன வின்ன, என்பவும் பிறவு முவமத் துரு
பே. (௧௬)

**M. F.** உவமைத்தொகை.—Ellipsis of the Conjunctive Particle உம.

368. எண்ண லெடுத்தன் முகத்த னீட்
டல், எனுநான் களவையு ளும்மில தத்தொ
கை. (௧௭)

**M. F.** அன்மொழித்தொகை.—Metonymy [Ellipsis of other words.]

369. ஐந்தொகை மொழிமேற் பிறதொக
லன்மொழி. (௧௮)

தொகைநிலை தொடர்மொழிகள் பொருள்சிறந்து நிற்கு மிடங்கள்.—How Elliptical Expressions are rendered intelligible.

370. முன்மொழி பின்மொழி பன்மொழி
புறமொழி, எனுநான் கிடத்துஞ் சிறக்குந்
தொகைப்பொருள். (௧௯)

இடத்தொகை, பெயர்த்தொகைகட்கு வேறுபாடறிகுறி.—
How to distinguish between an Ellipsis of
Casal Particles and that of Adjective
Particles in the case of Nouns in
Apposition.

371. வல்லொற்று வரினே யிடத்தொகை யாகும், மெல்லொற்று வரினே பெயர்த்தொகை யாகும். (௨0)

**M F.** உம்மைத் தொகைக்காவதோர் புறனடை.—Special Rule for the Ellipsis of உம.

372. உயர்திணை யும்மைத் தொகைபல ரீறே. (௨௧)

**F.** தொகைநிலைத் தொடர்மொழிகள் பலபொருள் படுதல்.—
Expansion of Ambiguous Elliptical
Expressions.

373. தொக்குழி மயங்கு மிரண்டு முதலேழ், எல்லைப் பொருளின் மயங்கு மென்ப.()

## ௩. தொகாநிலைத் தொடர்மொழிகள்.
## UN-ELLIPTICAL EXPRESSIONS.

**M. F.** தொகாநிலையின் இலக்கணம்.—Un-elliptical Expression Defined.

374. முற்றீ றெச்ச மெழுவாய் விளிப்பொ ருள், ஆறுரு பிடையுரி யடுக்கிவை தொகா நிலை. (உ௩)

## ௪. வழாநிலை, வழுவமைதி.
## GRAMMATICAL AND UNGRAMMATICAL EXPRESSIONS.

**F.** எழுவகை வழுக்கள்.—The Seven kinds of Grammatical inaccuracies.

375. திணையே பாலிடம் பொழுதுவினா விறை, மரபா மேழு மயங்கினும் வழுவே. (உ௪)

திணைபால்களோடு வினாவிடைகள் வழுவாமற் காத்தல்—How to avoid doubtful Gender in Questions and Answers.

376. ஐயந் திணைபா லவ்வப் பொதுவி னும், மெய்தெரி பொருண்மே லன்மையும் விளம்புப. (உ௫)

**M. F.** திணைவழுவமைதி.—Impersonal Class Words following a Personal Class, have a Predicate of the Latter Class.

377. உயர்திணை தொடர்ந்த பொருண் முதலாறும், அதனொடு சார்த்தி னத்திணை முடிபின. (உ௬)

**M. F** திணைபால்களின் மரபு வழுவமைதி.—Personal and Impersonal Classes having a common Predicate.

378. திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும், மிகவினு மிழிபினு மொருமுடி பினவே (உ௭)

**M. F.** திணைபால்வழுவமைதி.—Class, Gender and Number interchanged in certain cases.

379. உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும், இழிப்பினும் பாறிணை யிழுக்கினு மியல்பே. (உ௮)

**F.** பால்இட வழுவமைதி.—Interchange of Gender and Person.

380. ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும், ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே. (உ௯)

**M. F.** இடவழுவாமற்காத்தல்.—How to guard against errors as to Person in the use of தரல், வரல், கொடை, செலல்.

381. தரல்வரல் கொடைசெலல் சாரும் படர்க்கை, எழுவா யிரண்டு மெஞ்சிய வேற்கும். (௩0)

**M. F.** காலம் மூன்று.—The Three Tenses.

382. இறப்பெதிர்வு நிகழ்வெனக் கால மூன்றே. (௩௧)

**M. F.** காலவழுவமைதி.—The Present Indefinite expresses the three Tenses.

383. முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச், செப்புவர் நிகழுங் காலத்தானே. (௩௨)

**M. F.** காலவழுவமைதி.—Tenses interchanged in certain cases.

384. விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும், பிறழவும் பெறூஉ முக்காலமு மேற்புழி. (௩௩)

**M. F.** அறுவகை வினா.—Six kinds of Questions.

385. அறிவறி யாமை யையுறல் கொளல் கொடை, ஏவறரும் வினா வாறு மிழுக்கார். ()

**F.** எண்வகை விடை.—Eight kinds of Answers.

386. சுட்டு மறைநே ரேவல் வினாதல், உற்றதுரைத்த லுறுவது கூறல், இனமொழியெனு மெண் ணிறையு ளிறுதி, நிலவிய வைந்து மப் பொருண்மையி னேர்ப. (௬௫)

வினாவிடைகளில் முதல்சினை வழுவாமை.—In Questions and Answers the whole and its part are not to be confounded.

387. வினாவினுஞ் செப்பினும் விரவாசினை முதல். (௬௬)

**F.** மரபு.—Usage.

388. எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர், செப்பின ரப்படிச் செப்புதன் மரபே. (௬௭)

மரபு வழாநிலை.—Nouns of different shades of meaning should have a Verb of common import.

389. வேறுவினைப் பல்பொரு டழுவிய பொதுச்சொலும், வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும். (௬௮)

மரபுவழாநிலை.—The Meaning of an Equivocal Word determined by a word in the Context.

390. வினைசார் பினமிட மேவி விளங்காப், பலபொரு ளொருசொற் பணிப்பர் சிறப் பெடுத்தே. (௩௯)

மரபு வழாநிலை [பலபொரு ளொருசொற் றொடர் மொழிகள்].
Compounds having different meanings determined by dividing them into their component parts in Pronunciation.

391. எழுத்திய றிரியாப் பொருடிரி புணர் மொழி, இசைத்திரி பாற்றெளி வெய்து மென்ப. (௪0)

**M. F.** மரபு வழாநிலையும் வழுவமைதியும் [ஒருபொருட் பல பெயர்த் தொடருக்கு விதி].—Words in Apposition have generally a common predicate.

392. ஒருபொருண் மேற்பல பெயர்வரி னிறுதி, ஒருவினை கொடுப்ப தனியு மோரோ வழி. (௪க)

மரபுவழாநிலை [சிறப்புப்பெயர்கள் சேரவரின் இயற்பெயர் கடையில் வரவேண்டும்].—Epithets should precede the Name.

393. திணைநிலஞ் சாதி குடியே யுடைமை,

குணங்தொழில் கல்வி சிறப்பாம் பெயரோ,
டியற்பெய ரேற்றிடிற் பின்வரல் சிறப்பே. ()

மரபுவழூஉநிலையும் வழுவமைதியும் (சுட்டுப்பெயர்வரும் இடம்).
The Position of the Demonstrative.

394. படர்க்கைமுப் பெயரோ டணையிற்
சுட்டுப், பெயர்பின் வரும்வினை யெனிற்பெய
ர்க் கெங்கும், மருவும் வழக்கிடைச் செய்யுட்
கேற்புழி. (ஙகூ)

F மரபு வழூஉநிலையும் வழுவமைதியும் (அடுக்குத்தொடர்).—
Repetition of Words.

395. அசைநிலை பொருணிலை யிசைநிறைக்
கொருசொல், இரண்டு மூன்றுநான் கெல்லை
முறை யடுக்கும். (ஙஃ)

மரபுவழூஉநிலை (அடுக்குப் பிரிந்து பொருள்படா).—Words
donbled must not be divided.

396. இரட்டைக் கிளவி யிரட்டிற் பிரிந்
திசையா. (ஙரு)

மரபுவழூஉநிலை (முக்கியமான அடைப்பெயர்கள் பிரிக்கப்படா).
Essential Adjuncts not to be separated.

397. ஒருபொருட் பல்பெயர் பிரிவில
வரையார். (ஙசா)

**M. F.** மரபுவழுவமைதி (ஒருபொருட் பன்மொழி)—Redundant Words [Pleonasm] allowable in certain cases.

398. ஒருபொருட் பன்மொழி சிறப்பி
னின்வழா. (௪௭)

**M. F.** மரபுவழுவாமற்காத்தல் (முற்றும்மை உபயோகிக்கப் படுமிடம்). --When completo உம் is necessary.

399. இனைத்தென் றறிபொரு ளுலகி னி
லாப்பொருள், வினைப்படுத் துரைப்பி னும்மை
வேண்டும். (௪௮)

**F.** மரபுவழுவமைதி (செயப்படுபொருளைக் கருத்தாவாகக் கூறல்).—The Object sometimes expressed as Subject.

400. செயப்படு பொருளைச் செய்தது போ
லத், தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரி
த்தே. (௪௯)

அடையடுத்து வரும்மொழிகள்.—Compound Words.

401. பொருண்முத லாறு மடைசேர் மொ
ழியினம், உள்ளவு மில்லவு மாமிரு வழக்கி
னும். (௫௦)

அடைசேர்மொழிகள் இனமல்லாதனவுங் குறிக்கும்.—Compounds may also suggest others of opposite meaning.

402. அடைமொழி யினமல் லதுந்தரு மாண்டுறின். (௫௧)

அடைமொழிகள் முதல்வினைகளை யடுத்துவருமவிதம்.—How Epithets are used in Compound Words.

403. அடைசினை முதன்முறை யடைதலு மீரடை, முதலோ டாதலும் வழக்கிய லீரடை, சினையொடு செறிதலு மயங்கலுஞ் செயுட்கே.

மரபுவழுவமைதி:—(இயற்கைப்பொருளை யுணர்த்தல்).—How Natural Qualities are to be expressed.

404. இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல். (௫௩)

மரபுவழுவாமற் காத்தலும் வழுவமைதியும்: (செயற்கைப் பொருளையுணர்த்தல்):—How other Qualities are to be expressed.

405. காரண முதலா வாக்கம் பெற்றும், காரணமின்றி யாக்கம் பெற்றும், ஆக்க மின்றிக் காரண மடுத்தும், இருமையு மின்றியு மியலுஞ் செயும்பொருள். (௫௪)

மரபு வழுவாமற்காத்தல் (விடைகூறும விதம).—Direct and Indirect forms of Negation and Affirmation.

406. தம்பா லில்ல தில்லெனி னினனாய்,
உள்ளது கூறியு மாற்றியு முள்ளது, சுட்டியு
முரைப்பர் சொற்சுருங் குதற்கே. (௫௫)

மரபுவழுவாமற்காத்தல் (ஈ, தா, கொடு).—The usage of the words ஈ, தா, and கொடு.

407. ஈதா கொடுவெனு மூன்று முறை
யே, இழிந்தோ னொப்போன் மிக்கோ னிரப்
புரை. (௫௬)

**F.** வழுவமைதி (குறிப்பிற்றருமொழி)—Words that suggest Ideas.

408. முன்னத்தி னுணருங் கிளவியு முள
வே. (௫௭)

மரபுவழுவமைதி.—Personification.

409. கேட்குந போலவுங் கிளக்குந போல
வும், இயங்குந போலவு மியற்றுந போலவும்,
அஃறிணை மருங்கினு மறையப் படுமே. (௫௮)

மரபுவழுவமைதி (உருவக முதலியவற்றில், திணை, சினை, முதல்
கள் பிறழ்தல்).—In Rhetorical Figures,
Class, Gender, Whole and Parts
confounded.

410. உருவக வுவமையிற் றிணைசினை முத
ல்கள், பிறழ்தலும் பிறவும் பேணினர் கொள
லே. (ருக)

---

## ரு. பொருள்கோள்.
## POETICAL CONSTRUCTION.

---

பொருள்கோள் எண்வகை.—Eight kinds of
Constructions.

411. யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை
விற்பூண், டாப்பிசை யளைமறி பாப்புக்கொண்
டுகூட், டடிமறி மாற்றெனப் பொருள்கோ
ளெட்டே. (கூ0)

**F.** (1) யாற்று நீர்.—The Natural
Construction.

412. மற்றைய நோக்கா தடிதொறும் வான்
பொருள், அற்றற் றொழுகுமஃ தியாற்றுப்
புனலே. (கூக)

**F.** (2) மொழிமாற்று.—The Transposed Construction.

413. ஏற்ற பொருளுக் கியையு மொழி களை, மாற்றியோ ரடியுள் வழங்கன்மொழிமா ற்றே. (௯௨)

**F.** (3) நிரனிறை.—The Parallel Construction.

414. பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும், வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினும், நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே. (௯௩)

**F.** (4) பூட்டுவில்.—The Strung-Bow Construction.

415. எழுவா யிறுதி நிலைமொழி தம்முள், பொருணோக் குடையது பூட்டுவில் லாகும். ()

**F.** (5) தாப்பிசை.—The Swing or Double-faced Construction.

416. இடைநிலை மொழியே யேனை யீரிட த்தும், நடந்து பொருளை நண்ணுத றாப்பிசை.

**F.** (6) அளைமறி பாப்பு.—The Involved Construction, in which the sense begins at the end and goes backward to the beginning.

417. செய்யு ளிறுதி மொழியிடை முதலி னும், எய்திய பொருள்கோ ளளைமறி பாப்பே.

**F.** (7) கொண்டு கூட்டு.—The Dis arranged Construc tion, in which the sense is made up by selecting words here and there.

418. யாப்படி பலவினுங் கோப்புடைமொ ழிகளை, ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட் டே. (கஎ)

**F** (8) அடிமறிமாற்று —The Construction in which the lines are interchangeable without affecting the harmony or meaning of the stanza.

419. ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடி யவும், யாப்பீ றிடைமுத லாகினும் பொருளி சை, மாட்சியு மாறா வடியவு மடிமறி. (கஅ)

**பொதுவியல் முற்றிற்று.**



# ௪. இடையியல்.

## ON PARTICLES.

**M. F.** இடைச்சொல்லின் இலக்கணம்.—Particle Defined.

420. வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள், தத்தம் பொருள விசைநிறை யசைநிலை, குறிப்பெனெண் பகுதியிற் றனித்திய லின்றிப், பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத், தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல். (க)

**F.** இடைச்சொற் பொருள்கள்.—Significations of Particles.

421. தெரிநிலை தேற்ற மையமுற் றெண் சிறப், பெதிர்மறை யெச்சம் வினாவிழை வொழியிசை, பிரிப்புக் கழிவாக்க மின்னன விடைப்பொருள். (உ)

**M. F.** ஏகார இடைச்சொல், (ஆறுபொருள்).—Six uses of the particle ஏ.

422. பிரிநிலை வினாவெண் ணீற்றசை தேற் றம், இசைநிறை யெனவா றேகா ரம்மே. (௩)

**M. F.** ஓகார இடைச்சொல், (எண்பொருள்)—Eight use of the particle ஓ.

423. ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை
தெரிநிலை, கழிவசை நிலைபிரிப் பெனவெட்
டோவே. (௪)

**F.** என, என்று என்னு மிடைச்சொற்கள், (ஆறுபொருள்).—
Six uses of the particles என and என்று.

424. வினைபெயர் குறிப்பிசை யெண்பண்
பாறினும், எனவெனு மொழிவரு மென்று
மற்றே. (௫)

**M. F.** உம் இடைச்சொல் (எண்பொருள்).—Eight uses of the particle உம.

425. எதிர்மறை சிறப்பைய மெச்சமுற்
றளவை, தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்
டே. (௬)

முற்றும்மைக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding the particle உம denoting Universality.

426. முற்றும்மை யொரோவழி யெச்சமு
மாகும். (௭)

எச்ச உம்மைக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding the particle உம indicating something Understood.

427. செவ்வெண் ணீற்றதா மெச்ச வும்மை. (அ)

சில எண்ணிடைச் சொற்களுக் காவதோர் இலக்கணம.—Rule regarding certain Particles of Enumeration.

428. பெயர்ச்செவ் வெண்ணே யென்றா வெனாவெண், ணான்குந் தொகைபெறு மும்மையென் றெனவோ, டிந்நான் கெண்ணு மஃதின்றியு மியலும். (க)

என்று, என, ஒடு என்னும எண்ணிடைச் சொற்களுக்குச் சிறப்புவிதி.—Special Rule regarding the Particles of Enumeration என்று, என and ஒடு.

429. என்று மெனவு மொடுவு மொரோவழி, நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும். (க0)

பெயரோடு வரும் எண்ணிடைச் சொற்கள் வினையோடு வருமாறு.—The Particles of Enumeration used with Verbs, follow the same rules as when used with Nouns.

430. வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன. (கக)

**F.** தில் இடைச்சொல், (முப்பொருள்).—Three uses of the particle தில்.

431. விழைவே கால மொழியிசை தில்லே. (கஉ)

**F.** மன் இடைச்சொல், (அறுபொருள்) —Six uses of the particle மன்.

432. மன்னே யசைநிலை யொழியிசை யாக்கம், கழிவு மிகுதி நிலைபே றாகும். (கங)

**F.** மற்று என்னும் இடைச்சொல், (முப்பொருள்).—Three uses of the particle மற்று.

433. வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே. (கச)

**M. F.** மற்று என்னும் இடைச்சொற்குச் சிறப்புவிதி.—Special Rule regarding the particle மற்று.

434. மற்றைய தென்பது சுட்டிய தற்கினம். (கரு)

**M. F.** கொல் என்னு மிடைச்சொல், (இரண்டுபொருள்.)
Two uses of the particle கொல்.

435. கொல்லே யைய மசைநிலைக் கூற
றே. (கசு)

ஒடு, தெய்ய என்னுமிடைச் சொற்கள்.—The particles
ஒடு and தெய்ய.

436. ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழி
யே. (கஎ)

**M. F.** அந்தில், ஆங்கு என்னு மிடைச்சொற்கள், (இரண்டு
பொருள்)—Two uses of the particles
அந்தில் and ஆங்கு.

437. அந்திலாங் கசைநிலை யிடப்பொரு
ளவ்வே. (கஅ)

**F.** அம்ம என்னு மிடைச்சொல், (இரண்டு பொருள்).—Two
uses of the particle அம்ம.

438. அம்ம வுரையசை கேண்மினென்
றாகும். (ககூ)

மா என்னு மிடைச்சொல்.—The Optative particle மா.

439. மாவென் கிளவி வியங்கோ ளசைச்
சொல். (உ0)

முன்னிலை அசைச்சொற்கள்.—Vocative Particles.

440. மியாயிக மோமதி யத்தை யித்தை,
வாழிய மாளவீ யாழமுன் னிலையசை. (உக)

**F.** எவ்விடத்தும் வரும் அசைச்சொற்கள்.—Expletive Particles.

441. யாகா பிறபிறக் கரோபோ மாதிகும்,
சின்குரை யோரும் போலுமிருந்திட், டன்றாந்
தாந்தான் கின்றுநின் றசைமொழி. (உஉ)

இடையியல் முற்றிற்று.

---

# ௫. உ ரி யி ய ல்.

## ON QUALIFYING WORDS.

---

ADJECTIVES AND ADVERBS.

---

**M. F.** உரிச்சொல்லின் இலக்கணம்.—Qualifying Word defined.

442. பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி,
ஒருகுணம் பலகுணந் தழுவிப் பெயர்வினை,
ஒருவா செய்யுட் குரியன வுரிச்சொல். (க)

பண்பின் இலக்கணம்.—Quality defined.

443\. உயிருயி ரல்லதாம் பொருட்குணம் பண்பே. (௨)

ஐவகை உயிர்.—Five kinds of Living Creatures.

444\. மெய்ந்நா மூக்கு நாட்டஞ் செவிகளின், ஒன்றுமுத லாக்கீழ்க் கொண்டுமே லுணர்தலின், ஓரறி வாதியா வுயிரைந் தாகும். (௩)

ஓரறிவுயிர்கள்.—Creatures of one sense. (Perception).

445\. புன்மர முதலவுற் றறியுமோ ரறிவுயிர். (௪)

ஈரறிவுயிர்கள்.—Creatures of two senses. (Perception and Taste).

446\. முரணந் தாதிநா வறிவொடீ ரறிவுயிர். (௫)

மூவறிவுயிர்கள்.—Creatures of three senses, (Perception, Taste, and Scent.)

447\. சிதலெறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர் (௬)

நாலறிவுயிர்கள்.—Creatures of four senses.
(Perception, Taste, Scent, and Sight.)

448. தும்பிவண் டாதிகண் ணறிவினு லறி வுயிர் (எ)

ஐயறிவுயிர்கள்.—Creatures of five senses.
(Perception, Taste, Scent, Sight, Hearing.)

449. வானவர் மக்க ணரகர் விலங்குபுள், ஆதிசெவி யறிவோ டையறி வுயிரே. (அ)

உயிரல்லாத பொருள்கள்.—Lifeless Matter.

450. உணர்விய லாமுயி ரொன்று மொழித்த, உடன்முத லனைத்து முயிரல் பொருளே.

உயிர்ப்பொருள் (உடல் உயிர்).— Body and Soul,
One and yet Diverse.

451. ஒற்றுமை நயத்தி னொன்றெனத் தோன்றினும், வேற்றுமை நயத்தின் வேறே யுடலுயிர். (க0)

உயிர்ப்பொருளின்குணம்.—Qualities of Living
Creatures

452. அறிவரு ளாசை யச்ச மானம், நிறை பொறை யோர்ப்புக் கடைப்பிடி மையல், நினைவு வெறுப்புவப் பிரக்கநாண் வெகுளி, துணிவழுக் காறன் பெளிமை யெய்த்தல், துன்ப

மின்ப மிளமை மூப்பிகல், வென்றி பொச்சாப்
பூக்க மறமதம், மறவி யினைய வுடல்கொ ளுயிர்
க்குணம். (கக)

உயிர்ப்பொருளின் தொழிற்குணம்.—Faculties of Living Creatures.

453. துய்த்த றுஞ்சல் றொழுத லணிதல்,
உய்த்தலா தி யுடலுயிர்த் தொழிற்குணம்.(கஉ)

உயிரல் பொருளின் குணம்.—Qualities of Lifeless Matter.

454. பல்வகை வடிவிரு நாற்றமை வண்
ணம், அறுசுவை யூறெட் டுயிரல் பொருட்
குணம். (கங)

இருபொருட்குமின் தொழிற்குணம்.—Faculties and Qualities common to both.

455. தோன்றன் மறைதல் வளர்தல் சுரு
ங்கல், நீங்க லடைத லடுங்க லிசைத்தல், ஈத
லின்னன விருபொருட் டொழிற்குணம்.(கச)

**M. F.** ஒருகுணந் தழுவிய பல வுரிச்சொல்.—Six words implying one Quality [Excess.]

456. சால வுறுதவ நனிகூர் கழிமிகல். (கரு)

**M. F.** பலகுணந்தழுவிய ஒரு உரிச்சொல் (கங).—One word (கடி) expressing 13 Qualities.

457. கடியென் கிளவி காப்பே கூர்மை, விரைவே விளக்க மச்சஞ் சிறப்பே, விரைவே மிகுதி புதுமை யார்த்தல், வரைவே மன்றல் கரிப்பிறுகும். (கரு)

**F.** ஒரு குணந்தழுவிய பல உரிச்சொல்.—Sixteen words signifying சொல்.

458. மாற்ற நுவற்சிசெப் புரைகரை நொடி யிசை, கூற்றுப் புகறன் மொழிகிளவி விளம்ப றை, பாட்டுப் பகர்ச்சி யியம்பல் சொல்லே. ()

**F.** ஒரு குணந்தழுவிய பல உரிச்சொல்.—Twenty-two words signifying ஓசை.

459. முழக்கிரட் டொலிகலி யிசைதுவை பிளிறிரை, இரக்கமுங் கியம்ப விமிழ்குளி றதிர் குரை, கனைசிலை சும்மை கௌவை கம்பலை, அர வ மார்ப்போ டின்னன வோசை. (கஅ)

இவ்வுரிச்சொல் லியலுக்குப் புறனடை.—A Remark on this Chapter on Qualifying Words.

460. இன்ன தின்னுழி யின்னண மியலும், என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள், சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா, நல் லிலா குரிச்சொலி னயந்தனர் கொளலே. (கக)

சொல்லதிகாரத்துக்கு ஓர் புறனடை.—A General Remark on the Chapters on Words.

461. சொற்றொறு மிற்றிதன் பெற்றிபெ ரனைத்து, முற்ற மொழிகுறின் முடிவில வாதலிற், சொற்றவற் றியலான் மற்றைய பிறவும், தெற்றென வுணர்த றெள்ளியோர் திறனே.()

F. இந்நூலுக்கோர் புறனடை.—A Remark on Nannul in general.

462. பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையி னானே. (உக)

உரியியல் முற்றிற்று.

சொல்லதிகாரம் முற்றுப்பெற்றது.

---

கட்டளைக்கலித்துறை.

இருதிணை மூவிட நான்மொழி யைம்பா
லறுதொகை யேழ், அருவழு வெட்டுரு பொன்
பான் றொகாநிலை யாய்ந்தவெச்சம், ஒருபது
கோளெட்டு முப்பொழு தீரிட மொரியல்பாய்,
வருமொழி மூன்று முணரச்சொல் வண்மை
வருந்திருவே.

நன்னூல்மூலம் முற்றிற்று.

---

ஆக சூத்திரம் - சசஉ.